॥ श्री सन्ध्यावन्दनम् ॥

# ஸ்ரீ ஸந்த்யா வந்தனம்

(ஸ்வரத்துடன் ஸம்ஸ்க்ருத மூலம், பதவுரை, கருத்து—காயத்ரீ கவசம், ஹ்ருதயம், ஸ்தோத்ரம், காயத்ரீ த்யானம், ப்ரும்ம யக்ஞம், யக்ஞோபவீத தாரண மந்த்ரங்கள், ஸந்த்யானுஷ்டானத்தை விளக்கும் படங்களும் அடங்கிய அனுபந்தத் துடன் கூடியது)

ஆசிரியர்:

ஸ்ரீ வத்ஸ ஸோமதேவ சர்மா

(பத்ராதிபர்: "வைதிக தர்ம வர்த்தனி")

நான்காம் ப்ரசுரம்:

துன்முகிஞு சித்திரைமீ

கார்யாலயம்

வைதிக தர்ம வர்த்தனீ

2/218, தம்பு செட்டி தெரு, சென்னை 1

1956

விலை ரூ. 1-4-0

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy.

முதற் பதிப்பு : செப்டம்பர் 1952
இரண்டாம் பதிப்பு : டிஸம்பர் ,,
மூன்றும் பதிப்பு : அக்டோபர் 1954
நான்காம் பதிப்பு : மே 1956

" வைதிக தர்ம வர்த்தனீ "

(தர்ம ப்ரசார மாத வெளியீடு)

மன்மதஸூ ஐப்பசிமீ முதல் 9-வது ஆண்டு
தொடர்ச்சியாய் வெளிவரும் விஷயங்கள்

வேதபாஷ்யம், உபநிஷத் ஸாரம், ஸ்ரீ சங்கர உபதேசங்கள், க்ஷேத்ரங்கள், ஜீவனின் கதாகதி, பாலபாரதம், ஸ்த்ரீ தர்மங்கள், மற்றும் பல அரிய விஷயங்கள்.

தனிப்ரதி 6 அணு வருஷ சந்தா ரூ. 4

ப்ரோகிரஸிவ் பிரிண்டர்ஸ், சென்னை-1.

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

## சென்னை தினசரி பத்ரிகை "சுதேசமித்திரன்" கூறும் ஆசி மொழிகள்

ஸ்ரீஸந்த்யாவந்தனம்: ஸந்த்யாவந்தனம் நித்ய கர்மானுஷ்டானங்களில் ஒன்று. ஸந்த்யானுஷ்டானம் செய்யாமல் வேறு எந்தக் கர்மாவைச் செய்தாலும் அதற்குப் பயன் கிடையாது. ஆஸ்திகபுத்தியும் கடவுள் பக்தியும் இப்பொழுது நம் ஹிந்துக்களிடையே பரவி வருகிறது. ஸந்த்யாவந்தனம் செய்யவேண்டுமென்ற மனோபாவமும் ஏற்பட்டு வருகிறது. இது நம் சமூக க்ஷேமத்திற்கும் நாட்டின் சுபிக்ஷத்திற்கும் சுபமான சூசகமாகும்.

இப் புத்தகத்தை எழுதிய ஸ்ரீ வத்ஸ ஸோமதேவ சர்மா சிறந்த ஸம்ஸ்கிருத பண்டிதர். புராணப் பிரவசனங்களில் நல்ல க்யாதி பெற்றவர். அப்பேர்ப்பட்டவர் இப் புத்தகத்தை எழுதி வெளியிட்டிருப்பது ஆஸ்திகர்களின் பாக்யம். இதில் ஸ்வரத்துடன் ஸம்ஸ்கிருத மூலம் பதவுரை கருத்து ஸந்த்யானுஷ்டானத்தை விளக்கும் படங்களும் அடங்கியுள்ளன. காயத்ரியின் உருவப் படங்கள் காலையில் ப்ரும்மஸ்வரூபிணியாகவும் மத்யான்ஹிகத்தில் ருத்ர ரூபிணியாகவும், ஸாயங்காலத்தில் விஷ்ணு ஸ்வரூபிணியாகவும் ஸ்ரீ காயத்ரீ ஸமஷ்டி ஸ்வரூபமாயும் படங்கள் அடங்கியுள்ளது இப் புத்தகத்தின் விசேஷ மகிமையாகும்.

எந்த மந்த்ரத்தையும் அர்த்தம் தெரிந்து கூறுவது நல்லது. அது அதிக பலனைத் தரும். இந் நூலில் வெகு அழகான தெள்ளிய நடையில் ஆசிரியர் மூலத்திற்கு அர்த்தம் எழுதியிருக்கிறார். மனதைக் கவரும் விஷயங்களுடனும் படங்களுடனும் கூடிய இவ்வரிய நூல் ஒவ்வொரு ஆஸ்திகர் வீட்டிலும் இருக்க வேண்டியது அவசியம். நல்ல காகிதத்தில் அச்சிடப்பட்டிருக்கிறது. அட்டையும் கண்ணைக் கவருவதாயிருக்கிறது.

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

முதற் பதிப்பு : செப்டம்பர் 1952
இரண்டாம் பதிப்பு : டிஸம்பர் ,,
மூன்றும் பதிப்பு : அக்டோபர் 1954
நான்காம் பதிப்பு : மே 1956

"வைதிக தர்ம வர்த்தனீ"

(தர்ம ப்ரசார மாத வெளியீடு)

மன்மதஞு ஐப்பசிமீ முதல் 9-வது ஆண்டு

தொடர்ச்சியாய் வெளிவரும் விஷயங்கள்

வேதபாஷ்யம், உபநிஷத் ஸாரம், ஸ்ரீ சங்கர உபதேசங்கள், க்ஷேத்ரங்கள், ஜீவனின் கதா கதி, பாலபாரதம், ஸ்த்ரீ தர்மங்கள், மற்றும் பல அரிய விஷயங்கள்.

தனிப்ரதி 6 அணு வருஷ சந்தா ரூ. 4

ப்ரோகிரஸிவ் பிரிண்டர்ஸ், சென்னை-1.

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

## சென்னை தினசரி பத்ரிகை "சுதேசமித்திரன்" கூறும் ஆசி மொழிகள்

ஸ்ரீஸந்த்யாவந்தனம்: ஸந்த்யாவந்தனம் நித்ய கர்மானுஷ்டானங்களில் ஒன்று. ஸந்த்யானுஷ்டானம் செய்யாமல் வேறு எந்தக் கர்மாவைச் செய்தாலும் அதற்குப் பயன் கிடையாது. ஆஸ்திகபுத்தியும் கடவுள் பக்தியும் இப்பொழுது நம் ஹிந்துக்களிடையே பரவி வருகிறது. ஸந்த்யாவந்தனம் செய்யவேண்டுமென்ற மனோபாவமும் ஏற்பட்டு வருகிறது. இது நம் சமூக க்ஷேமத்திற்கும் நாட்டின் சுபிக்ஷத்திற்கும் சுபமான சூசகமாகும்.

இப் புத்தகத்தை எழுதிய ஸ்ரீ வத்ஸ ஸோமதேவ சர்மா சிறந்த ஸம்ஸ்கிருத பண்டிதர். புராணப் பிரவசனங்களில் நல்ல க்யாதி பெற்றவர். அப்பேர்ப்பட்டவர் இப் புத்தகத்தை எழுதி வெளியிட்டிருப்பது ஆஸ்திகர்களின் பாக்யம். இதில் ஸ்வரத்துடன் ஸம்ஸ்கிருத மூலம் பதவுரை கருத்து ஸந்த்யானுஷ்டானத்தை விளக்கும் படங்களும் அடங்கியுள்ளன. காயத்ரியின் உருவப் படங்கள் காலையில் ப்ரும்மஸ்வரூபிணியாகவும் மத்யான்ஹிகத்தில் ருத்ர ரூபிணியாகவும், ஸாயங்காலத்தில் விஷ்ணு ஸ்வரூபிணியாகவும் ஸ்ரீ காயத்ரீ ஸமஷ்டி ஸ்வரூபமாயும் படங்கள் அடங்கியுள்ளது இப் புத்தகத்தின் விசேஷ மகிமையாகும்.

எந்த மந்த்ரத்தையும் அர்த்தம் தெரிந்து கூறுவது நல்லது. அது அதிக பலனைத் தரும். இந் நூலில் வெகு அழகான தெள்ளிய நடையில் ஆசிரியர் மூலத்திற்கு அர்த்தம் எழுதியிருக்கிறார். மனதைக் கவரும் விஷயங்களுடனும் படங்களுடனும் கூடிய இவ்வரிய நூல் ஒவ்வொரு ஆஸ்திகர் வீட்டிலும் இருக்க வேண்டியது அவசியம். நல்ல காகிதத்தில் அச்சிடப்பட்டிருக்கிறது. அட்டையும் கண்ணைக் கவருவதாயிருக்கிறது.

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

# முகவுரை

ஸ்ரீ ஸந்த்யாயைநம :

"கர்மாவினாலேயே ஜனகர் முதலானோர் ஸித்தியடைந்தனர். ஆதலின் நீயும் கர்மாவைச் செய். கர்ம ஸன்யாஸத்தை விட கர்ம யோகம் மேலானது" —கீதாசார்யன்.

"கர்மாவைச் செய். தூங்காதே" —வேதம்.

ப்ராஹ்மண ஸமூகத்திற்கு ஒரு விக்ஞாபனம். நீண்ட காலம் தூய வாழ்வு வாழ்ந்து, ஆரோக்யத்தையும் நீண்ட ஆயுளையும், புத்ர பௌத்ராதி பாக்யத்தையும், நற்கீர்த்தியை யும் பெற்ற மஹரிஷிகளின் மரபில் தோன்றியவர் நாம் அனை வரும். ஸந்த்யை முதலிய கர்மாக்களை நன்கு அனுஷ்டித்ததே அதற்குக் காரணம். ஸந்த்யா வந்தனம் எனும் கர்மா ஆணி வேர் போலானது. மற்ற எந்தக் கர்மாவையும் விட்டுவிட லாம். ஸந்த்யை ஒன்றையேனும் நன்கு அனுஷ்டித்தால் ப்ராஹ்மண்யம் நிலைக்கும். கால தேச வர்த்தமானங்களை அனுஸரித்து, நம் குடும்ப வாழ்க்கைக்கு வேண்டிய பொருள் தேடவே பொழுது போதவில்லை. உரிய காலத்தில் ஒருவித கர்மாவையும் செய்ய ஸமயம் வாய்ப்பதில்லை. கிடைத்த சிறிது நேரத்திலாவது நம் ஜன்மா நிலைக்க வேர்போன்ற ஸந்த்யாவந் தனத்தின் பெருமையைப்பற்றி அறிந்து, ஸௌகர்யம் உள்ள போது நன்கு அனுஷ்டிக்கக்கூடாதா என்ற அந்தரங்க அபிப் ராயத்துடன் இதை வெளியிட முன்வந்தோம். கனதனவான் கள் ஏற்கவேண்டிய பணி இது. இடைவிடா முயற்சியும் தெய் வானுக்ரஹமுமே எங்கள் மூலதனம். முன்பணம் போட்டு, வ்யாபார முறையில் லாபம் ஸம்பாதிக்க எண்ணமில்லை. நாங் கள் புஸ்தக வ்யாபாரிகளுமில்லை. ஆஸ்திக அன்பர் ஆதரவை எதிர்பார்த்து இத்தொண்டில் ஈடுபட்டோம்.

இச் சிறு நூலில் விஸ்தாரமாக ஸந்த்யையை அனுஷ்டிக் கும் முறையும், அதன் ஸ்தூல, ஸூக்ஷ்ம, வேதாந்த தாத்பர்யம், ஸ்வரத்துடன் ஸம்ஸ்க்ருத எழுத்தில் மந்த்ரங்கள், தமிழ் மொழி

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

பெயர்ப்பு, பத அர்த்தம், அபூர்வ விஷயங்களான பூத சுத்தி, காயத்ரீ கவசம், ஹ்ருதயம், சாபவிமோசனம், ஸ்தோத்ரம் முதலியன ஸம்ஸ்க்ருத, தமிழ் எழுத்துக்களிலும், காயத்ரியின் ஒவ்வொரு அக்ஷரத்திற்கும் ரிஷி, சந்தஸ், தேவதை, சக்தி, வர்ணம் பலன் முதலியவைகளும், ஸந்த்யாவந்தனம் செய்வதை விளக்கும். படங்களும், காயத்ரியின் படங்களும் வெளியிடப்பட்டிருக்கின்றன.

உயர்ந்த காகிதத்தில், நன்கு அச்சிடப்பட்டு, மனத்தைக் கவரும் விஷயங்களுடனும, படங்களுடனும் கூடிய இப் புஸ்தகம் ஒவ்வொரு ஆஸ்திகர் வீட்டிலும் இருக்கவேண்டியது அவச்யம் என்பது சொல்லாமலே விளங்கும். ஒவ்வொருவரும் தமக்கு ஒரு ப்ரதி வாங்குவதுடன் த்ருப்தியடையாமல், தேவாம்ருதம் போன்ற இதை தம் நண்பர்களுக்கும் வாங்கியளிக்க வேண்டும். கனதனவான்கள், இதற்கு முன்பணம் அளித்து உதவி செய்யாமல் போனாலும், இந்த அரிய நூல் வெளிவந்த பிறகேனும் மனமுவந்து நூற்றுக்கணக்கான ப்ரதிகளை வாங்கி ஏழைச் சிறுவர்களுக்கு அளித்தால், பாடசாலைகள் கூட அதிகமில்லாத இக்காலத்தில், சிறந்த க்ஞான யக்ஞம் செய்த பலனை பெறுவார்கள் என்பது நிச்சயம்.

தைத்திரிய க்ருஷ்ண யஜுர் வேதத்தைத் தழுவி இது எழுதப்பட்டிருந்தாலும், மற்ற வேதத்தைச் சார்ந்தவரும் அறிய வேண்டிய பொதுவான விஷயங்கள் அனைத்தும் இங்கே தொகுக்கப்பட்டிருப்பதால் எல்லோருக்கும் இது மிக உபயோகமானது. வேத மந்த்ரங்களுக்குப் பாஷ்யம் எழுதியவர் பலர். அவரவர் அறிவுக்கு ஏற்றபடி அர்த்தம் கொள்வர். தனித்தனி பதம் பிரித்து அர்த்தம் எழுதுவதற்கும், பொதுவான அர்த்தத்திற்கும் சிறிது மாறுபாடு ஏற்படலாம். அந்தந்த மந்த்ரத்தின் உட்கருத்தை அறிந்து அனுஷ்டிப்பது விசேஷமானது.

ஸ்வரம்: உதாத்தம், அனுதாத்தம், ஸ்வரிதம், தீர்க்க ஸ்வரிதம் எனப்படும். ஒரு எழுத்திற்கு மேல் கோடுபோட்டிருந்தால் 'ஸ்வரிதம்'—உச்சரிப்பை உயரத்தூக்கிச் சொல்ல வேண்டும். கீழே கோடு போட்டிருந்தால் 'அனுதாத்தம்'

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

கீழே இறக்கியும், மேலே இரண்டு கோடு போட்டிருந்தால் தீர்க்க ஸ்வரிதம். உயரத்தூக்கி சிறிது நீட்டியும், ஒன்றும் போடாவிட்டால் 'உதாத்தம்'—ஸாதாரணமாயும் கூறவேண்டும். இதைவிட அதிகமாக எழுத்து மூலமாய் விவரிக்க முடியாததால், தயவு செய்து, அவரவர் குருவைக் கேட்டு தெரிந்து கொள்வது விசேஷமானது.

தமிழ் பாஷையில் அதிக பாண்டித்யம் இல்லாததால் பற் பல சொற் பிழைகளும் அச்சாபீஸ் அனுபவம் இல்லாதலால் அச்சுப் பிழைகளும் தோன்றலாம். முடிந்த வரையில் பல முறை திருத்தியிருக்கிறோம். அச்சாபீஸ் அனுபவம் உள்ளவர்களுக்கே இதில் உள்ள கஷ்டங்கள் விளங்கும்.

பெரிய தப்பிதங்கள் நேராது என்று நம்புகிறோம். அன்பர்கள் தயவுடன் இதிலுள்ள எங்களுக்கும் புலப்படாத பிழைகளை அறியப்படுத்தினால், அடுத்த வெளியீட்டில் கட்டாயம் நன்றியுடன் அவைகளைப் பயன்படுத்துகிறோம்.

அன்பர் ஆதரவு இன்றியமையாதது.

நான்காவது பதிப்பாக வெளியிடப்படும் இந்த அரிய ப்ரசுரத்தை ஜகன்மாதாவின் பாதகமலங்களில் ஸமர்ப்பிக்கிறோம்.

ப்ரசுரகர்த்தா

## ஓர் விக்ஞாபனம்

எங்கள் சிற்றறிவுக்கு எட்டியவரை பிழைகளைத் திருத்தியுள்ளோம். அப்படியும் சில தப்பிதங்கள் நேர்ந்திருந்தால் மன்னிக்கவும். ஸ்வரங்களுக்கு சிறிய கோடுகள் போடப்படுகின்றன. இவைகள் அச்சு யந்திரங்கள் வேகமாய் வேலை செய்யும்போது, ஒடிந்து போகின்றன. அல்லது இடம் விட்டு நகர்ந்து விடுகின்றன. இதனால் ஸ்வரம் மாறிவிடும். வஸதியுள்ளவர் தம் ஆசார்யரிடம் காட்டி, தப்பிதம் ஏதாவது இருந்தால். திருத்திக்கொள்ள வேண்டுகிறோம்.

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

# பொருளடக்கம்

## ஸ்ரீ காயத்ரியின் உருவப் படங்கள்

## (இரு வர்ணம்)



CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy



ஸ்ரீ ஸாவித்ரீ (மாத்யான்ஹிகத்தில்)—ருத்ர ரூபிணீ

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy



ஸ்ரீ ஸரஸ்வதீ (ஸாயங்காலத்தில்)—விஷ்ணு ஸ்வரூபிணி

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy



ஸ்ரீ காயத்ரீ (ஸமஷ்டி ஸ்வரூபம்)

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

# ஸ்ரீ ஸந்த்யாவந்தன அவதாரிகை



ஒவ்வொருவரும் இன்பத்தையே விரும்புகிறோம். துன்பத்தை எவரும் விரும்புவதில்லை. நினைத்த வண்ணம் இன்பம் வருவதில்லை. ஏனங்ஙனம் எனில் கண்ணுக்குத் தெரியவில்லை. புத்திக்கும் எட்டவில்லை. இங்குதான் நமது வேதம் புகுந்து உண்மையை விளக்குகிறது. அதை விவரிக்கின்றது தர்மசாஸ்த்ரம். அதைக் கதை ரூபமாக ப்ரகாசப் படுத்துகிறது புராணம்.

ஶ்ருதி, ஸ்ம்ருதி, புராணம் இவை எல்லாம் ஒன்று கூடி ஒரு உண்மையைக் கூறுகின்றன. அஃதென்ன? நீ நற்கருமம் அல்லது புண்யம் செய்ததால் இன்பத்தைப் பெறுகிறாய். தீய கார்யம் செய்ததால் துன்பம் அடைகிறாய் என்று கூறுகின்றன. அவை இறைவனது ஆணைரூபமாம். அவைகட்கு எல்லாம் தெரியும். " இவை நற்கருமம்! இவை தீய கருமம்! நல்லதைச் செய், தீயதை விடு " என்கின்றன. அறிந்தோ அறியாமலோ தீயதைச் செய்தால் அதனால் வரும் துன்பம் அகல இதைச் செய் என்றும் உபதேசிக்கின்றன. அதை ஸ்ம்ருதிகள் வர்ண தர்மம், ஆச்ரம தர்மம், ஸாமான்ய தர்மம், விசேஷ தர்மம் என பலவாகக் கூறுகின்றன.

வர்ண தர்மத்தில் த்விஜர் அதாவது இருபிறப்பாளர் என்ற 3 வர்ணத்திற்கும், ப்ரும்மசாரி, க்ருஹஸ்தன், வாநப்ரஸ்தன், ஸன்யாஸி என்ற ஆச்ர


CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

மத்திற்கும் சில ப்ரத்யேக தர்மங்களைக் கூறுகிறது. இவைகளைத் தவிர மற்றவர்க்கும் இவர்க்கும் பொதுவாக சில தர்மங்களைக் கூறுகிறது சாஸ்த்ரம். உடலுக்கு உணவு போல் உயிருக்கு இந்த தர்மம் இன்றியமையாதது. உணவு உடலை வளர்க்கும். தர்மம் உயிரை வளர்க்கும். உயிருக்கு உடல் ஒரு பெட்டி அல்லது வீடு. உயிரில்லா உடல் பிணம். உயிருக்கு உரமூட்டுவதே அறம். அறஞ் செய்வோர் இன்பம் பெறுவர்.

அன்றன்று த்விஜர் செய்யவேண்டிய அறம் ஆஹ்நிகம் எனப்படும். அது ஸ்நாநம் ஸந்த்யை, ஜபம், ஹோமம், வேத மோதல், தேவபூஜை, விருந்தளித்தல் என்பனவாம். இவைகளில் ஸ்நாநமென்பது எல்லா கர்மாக்களுக்கும் முதல் அங்கமாம். ஸ்நாநம் செய்யாமல் எந்த வைதிக கர்மாவையும் செய்யக் கூடாது. செய்தால் கர்மா பயனைத் தராது. அப்படியே ஸந்த்யா வந்தந ஜபம் என்ற கர்மா. அதை விட்டு வேறெந்த கர்மாவைச் செய்தாலும் அது பயனைத் தராது. ஆதலால் முதலில் ஸந்த்யா கர்மாவைச் செய்யவேண்டும். ஸந்த்யையின் பலன் :

विप्रो वृक्षः तस्य मूलं हि सन्ध्या ।
मूले छिन्ने नैव पुष्पं फलं वा ॥

விப்ரோ வ்ருக்ஷ : தஸ்ய மூலம் ஹி ஸந்த்யா ।
மூலே சின்னே நைவ புஷ்பம் பலம் வா ॥

" த்விஜன் ஒரு மரம். அதன் வேர் ஸந்த்யா கர்மா. வேரை வெட்டிவிட்டால் மரமேது ? புஷ்பமேது ? பலமேது? " என்கிறது சாஸ்த்ரம். இந்த முக்யமான கர்மாவைச் செய்யவே உபநயநம், உபநயந தீக்ஷை செய்யப்படுகிறது. உபநயநத்தில் காயத்ரீ மந்த்ரமே ப்ருஹ்மோபதேசம் என்ற பெயரால் உபதேசிக்கப்படுகிறது. அதன் பிறகுதான்

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

ஸந்த்யாவந்தநம் அனுஷ்டிக்கவேண்டும். காயத்ரீ உபதேசம் பெற்றவர்தான் ஸந்த்யா கர்மாவைச் செய்யவேண்டும்.

அன்றன்று மனதினுலும் வாக்கினுலும் உடலினுலும் செய்த பாபங்களை அகற்றுகிறது இந்த கர்மா. பாபம் அகன்றபின்தான் கர்மாக்களைச் செய்யவேண்டும். அப்பொழுது அது பூர்ண பயனைத் தரும். அது மாத்ரமல்ல. பாபங்களை அகற்றி புண்யத்தைத் தரும் புண்யகர்மாவுமாகும் ஸந்த்யை. நாமடைந்த உயர் ஜன்மாவிலிருந்து தாழ்ந்த ஜன்மாவை அடையாதபடி நம்மை ரக்ஷிக்கின்றது ஸந்த்யை எனும் இந்த நித்ய கர்மா. இதைத் தவிர இதற்கு விசேஷ புண்யமில்லை என்பர் சிலர். உள்ள நிலையிலிருந்து கீழே விழாமல் ரக்ஷிப்பதே ஒரு பெரும் பயனல்லவா? இந்த ஸந்த்யா கர்மாவை விதித்த வேதம், "ஸகலம் பத்ரம் அஶ்நுதே" **सकलं भद्रं अश्नुते** "எல்லாவித நன்மையையும் பெறுகிறான்" என பலனைக் கூறுகிறது. ஆதலின் த்விஜர் என்ற 3 வர்ணத்தாரும் நான்கு ஆச்ரமத்தாரும் இந்த கர்மாவைச் செய்யவேண்டும். (துறவிகளது ஸந்த்யா கர்மா மற்றவர் கர்மா போலல்ல. வேறு வகையான ஸந்த்யா அநுஷ்டானம்). தற்காலம் க்ஷத்ரிய வைச்யர்கள் முற்காலத்து ஆசார அநுஷ்டானம் போலல்லாமல் பௌராணிக ஸந்த்யா வந்தனம் செய்து வருகின்றனர்.

**ऋषयो दीर्घ सन्ध्यत्वात् दीर्घमायुरवाप्नुयुः ।**
**प्रज्ञां यशश्च कीर्तिंच ब्रह्मवर्चसमेवच ॥**

*ரிஷயோ தீர்க்க ஸந்த்யத்வாத் தீர்க்கமாயு ரவாப்னுயு: ।*
*ப்ரக்ஞாம் யச: ச கீர்த்திஞ்ச ப்ரும்ம வர்சஸ மேவச ॥*

நீண்டகாலம் ஸந்த்யா கர்மாவைச் செய்த முனிவர் தீர்க்காயுளை அடைந்தார்கள். அறிவு, நற்பெயர்,

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

புகழ், ப்ரும்ம வர்சஸ் இவைகளையும் பெற்றனர் (மநுஸ்ம்ருதி) என்று இதற்கு பலவகையான பலன் கூறப்படுகிறது.

இதன் கருத்தையும் மந்த்ர அர்த்தத்தையும் உணர்ந்து அநுஷ்டானம் செய்தால் சித்தசுத்தி சாந்தி, க்ஞானம், மோக்ஷம் முதலிய சிறந்த பலனை யும் பெறலாம். ஸந்த்யையில் முக்யமாக உள்ள காயத்ரியும், அர்க்யம் விட்டபின் விதிக்கப்பட்ட "அஸௌ ஆதித்யோ ப்ரும்மா" என்ற உபாஸந மும் மோக்ஷ பலனையே அளிக்கவல்லவை.

ஏழு கல்பம் ஜீவித்திருக்கும் மார்க்கண்டேயர் தனது நீண்ட வாழ்க்கையில் வெறுப்பு அடைந்தார். நாரதரை அணுகித் தனது ஜீவந காலம் எதுவரை? என்று கேட்டார். அவர் தான் ப்ரும்மலோகஞ் சென்று அறிந்து வருவதாகச் சொல்லிச் சென்றார். அன்று மாலை ஸந்த்யா காலம் வந்துவிட்டது. எங்கும் ஜலம் அகப்படவில்லை. மார்க்கண்டேயர் அலைந்து திரிந்து ஓடினார். ஒரு சேரியினருகே ஒரு குட்டை தென்பட்டது. அது தோலை அழுக வைத்துப் புழு நிறைந்திருந்தது. காலத்தில் கடனைச் செய்ய அதில் முழுகினார். கர்மாவைச் செய்து முடித்தார். உடனே அவர் முன் நாரதர் தோன்றினார். "வயது எது வரை" என மார்க்கண் டேயர் வினவினார். "நீர் காலத்தில் ஸந்த்யையைச் செய்யும் வரை உமக்கு ஆயுள். அதை விட்ட போதே மரணம்" என்றார் நாரதர். ஸந்த்யை நீண்ட ஆயுளை அளிப்பது, காலந்தவறாமல் செய்யத் தக்கதென்றும் இக்கதை போதிக்கின்றது.

தற்கால ஆங்கிலப் படிப்பிலே பாஷை, கணக்கு, சரிதம், விக்ஞாநம், பூகோளம் முதலிய பாடம் கற்பிக்கப் படுகிறது. அதில் தேறியவர்

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

ஸர்வகலாசாலையில் படிக்கும்போது அவரவர்க்கு எதில் விருப்பமோ அதைக்கொண்டு பி. ஏ. படிக்கின்றனர். ஸந்த்யையில் கர்மா, பக்தி, யோகம், க்ஞானம் இவை அமைந்துள. ஸந்த்யையை நன்கு அநுஷ்டிப்பவர் முக்திக்கு இவைகளில் ஒன்றைக் கைப்பற்றலாம். அதன் மூலமாக இன்பம் பெறலாம். "அக்நி:ச", "ஸூர்ய:ச", என்பதில் கடைசியில் ஸ்வாஹா எனக் கூறுகிறோம். அது கர்ம ஆசாரத்திற்கு வழி காட்டியாம். ப்ராணாயாமம் யோகத்திற்கு அடிகோலுவதாம். அர்க்யமளித்தல் பக்தியின் ஓரம்சம். "அஸௌ ஆதித்ய:" என்ற த்யாநம் க்ஞானத்திற்கு வித்தாம். பிறவிக்கடலைத் தாண்டி வைப்பவை முற்கூறியவை. க்ஞாநம் நேராகவும் மற்றவை பரம்பரையாகவும் சிறந்த பயனைத்தருகின்றன. மோக்ஷம் அல்லது பேரின்பத்திற்கு ஸாதநமாக ஸந்த்யை அமைந்துள்ளது.

## ஸர்வ வ்யாபகமானது ஸந்த்யை

இந்த கர்மா தேவராலும் மூவராலும் செய்யப்படுகிறது. அஸுரரும், நரரும் இதைச் செய்து வருகின்றனர். ப்ரும்மா, விஷ்ணு, சிவன் ஆகிய இவர்களும் ஸந்த்யா கர்மாவைச் செய்கின்றனர். வைகுண்டநாதன் அவதாரமான ராமரும், க்ருஷ்ணரும் ஸந்த்யை செய்தனர். நமது கோத்ர ரிஷிகளான வஸிஷ்டர், அத்ரி, ஆங்கீரஸர், கச்யபர், கௌதமர், பரத்வாஜர் முதலியவர்களும் ஸந்த்யை செய்தனர். சிரஞ்ஜீவிகள் இன்றும் செய்கின்றனர். தர்மநூல் இயற்றிய மநு, யாக்ஞவல்க்யர், பராசரர் முதலியவரும் செய்தனர். ஆபஸ்தம்பர், போதாயநர், ஆச்வலாயநர் முதலிய ஸூத்ரகாரர்களும் செய்தனர். ராஜாக்களும், கவி

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

களும், பக்தர்களும், ஆசார்யர்களும் அனுஷ்டித்தனர். தொன்று தொட்டு எல்லோராலும் எக்காலத்திலும் செய்யப்படுகிறது. ஆசௌசம் (தீட்டு) வந்தபோது கூட செய்ய வேண்டியது ஸந்த்யை ஒன்றே. ஸ்ரீ ராமன் பெருமையைக் கூற வந்த வால்மீகி அடிக்கடி ஸந்த்யையைக் கூறுகிறார். பாண்டவ கௌரவப்போரை வர்ணிக்கும் வ்யாஸர் இதைப் புகழுகிறார். காவ்யம் எழுதும் கவிகள் கூறுகின்றார்கள். விசேஷமாக காளிதாஸன் இதை மறவாமல் அடிக்கடி கூறுகின்றார். பரமசிவன் ஸந்த்யாநுஷ்டாநம் செய்ததாக குமார ஸம்பவத்தில் வர்ணிக்கிறார். நமது மூதாதைகளும் ச்ரத்தையுடன் செய்து வந்தார்கள். ஒரு நாட்டில் மாத்ரமல்ல! காசி முதல் கன்யாகுமரி வரை இது எல்லோராலும் அநுஷ்டிக்கப்படுகிறது. அன்ய மதத்தினரால் “ப்ரேயர்” என்ற பெயரால் காலை மாலைகளில் ஸந்த்யை அவரவருக் கேற்ற வகையில் செய்யப்படுகிறது. ஆபத்தில் கஷ்டகாலத்தில் கூட சுருக்கமாகவாவது செய்யவேண்டும். ஸந்த்யா காலத்தில் சண்டையை நிறுத்தி ஸந்த்யை செய்வது நம் போர்வீரர் வழக்கம்.

இரவிலும் போர் உண்டென கௌரவர் கூறினபோது சிறிது காலம் ஆயுதபாணிகளாகவே வீரர்கள் ஸந்த்யா த்யாநம் செய்ததாக பாரதம் கூறுகிறது. ஸந்த்யை எவ்வளவு முக்யமோ அவ்வளவு முக்யம் காலமும் ஆகும். அதனால் ஸந்த்யா என்று காலத்தின் பெயரே இதற்கு இடப்பட்டது. தந்தை இறந்து அவ்வுடலுக்கு ஈமைக் கடனைச் செய்யும்போது இடையில் ஸந்த்யாகாலம் வந்தால் ஸ்நாநம் செய்து ஸந்த்யையைச் செய்த பின்பே பித்ருகர்மா செய்யவேண்டும்.

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

**शुचिर्वापि अशुचिर्वापि काले सन्ध्यां समाचरेत् ॥**

*சுசிர்வாபி அசுசிர்வாபி காலே ஸந்த்யாம் ஸமாசரேத் ॥*

சுத்தனே அசுத்தனே 'காலத்தில் ஸந்த்யை செய்யவேண்டும். அகாலத்தில் செய்வது மலடியின் சேர்க்கை போலாகும். காலம் கடந்து விட்டது, இனி செய்தும் பயனில்லையே, என்று இதை விட்டு விடலாகாது. அடுத்தவேளை செய்ய வேண்டிய ஸந்த்யா கர்மாவிற்கு ஏற்ற காலம் வந்து விட்டால் முதலில் அதைச் செய்து அதன் பிறகு விட்டுப் போனதைச் செய்யவேண்டும். நோய் வாய்பட்டு படுக்கையில் படுத்திருந்தால் அவனுக்காக அவன் புத்ரன் அல்லது நெருங்கியவர் 'அந்தந்த காலத்தில் ஸந்த்யை செய்து இவனது கரத்தில் சிறிது ஜலத்தை விடவேண்டும்.

ஒருவனை இவ்வூருக்கு எப்படி வழி என்று கேட்போம். அவன் வழியைக் கூறியவுடன் அவனுக்கு வந்தனம் கூறுகிறோம். இது நாகரிகம் எனப்படுகிறது. உலகிலும் நம் உடலிலும் உள்ள அசுத்தங்களை அகற்றுகிறார் ஸூர்யன். தனது கிரணங்களால் ஜீவ கலையை ஊட்டுகிறார். மழையை அளிக்கிறார். இருளை நீக்கி ஒளியை அளிக்கிறார். அத்தகைய ஸூர்யனுக்கு நன்றி செலுத்த வேண்டாமா? அவர் செய்யும் உதவிக்கு ஸந்த்யை என்ற உபகாரம் கூட செய்யாவிடில் நாம், நன்றி கெட்டவரல்லவா? த்ரோஹி அல்லவா? அநாகரிகரல்லவா? ஆகவே, ஒவ்வொரு வேளையும் காலந் தவறாமல் நம் கடமை என இதைச் செய்ய வேண்டும்.

இதை விட்டவர் ஸூர்யனைக்கொன்ற பாபியாவர். குருடனாகவும், கோட்டானாகவும், பாபியாகவும் பிறப்பர் என்று தர்ம சாஸ்த்ரம் கூறுகிறது.

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

ஸந்த்யாகாலத்தில் வேறு எந்த கர்மாவையும் செய்யக்கூடாது. ஸந்த்யையைவிட்டு வேறு தேவபூஜை, பஜனை முதலிய நற் கருமங்களைச் செய்தால் கூட அவை பலனைத்தரா. யஜமானன் வாயிற்காக்கும்படி ஒருவனுக்கு வேலை தந்தார். அவன் அதை விட்டு வயலைக்காத்தேன் என்றால் அவர் இவனிடம் கோபிப்பார் அல்லவா? நமக்கு ஸந்த்யா காலத்தில் ஸ்ந்த்யா வந்தனந்தான் செய்யவேண்டும் என்பது பகவானது ஆக்ஞை. அதை விட்டு மற்றதைச் செய்தால், பகவானது அருளைப் பெறமுடியுமா? அவர் கோபத்திற்கு அல்லவோ பாத்ரம் ஆவோம்! ஒரு விதை விதைக்க ஏற்ற ஒரு காலமுண்டு. அந்த காலத்தில் விதைத்தால்தான் நற்பலனைப் பெறலாம். ஒரு ராகம் பாட ஒரு காலம் உண்டு. அப்போது அதைப் பாடினால்தான், அது பரிமளிக்கும். காலந்தவறாமல் ஸந்த்யையைச் செய்தால் தான் அது பயனைத்தரும். நீதிஸ்தலத்தில் குறித்த காலத்தில் நாம் இல்லை எனில் வழக்கைத்தள்ளி விடுவர். அல்லது எதிரிக்கு ஸாதகமாகத் தீர்ப்பு கூறப்படும். குறித்த காலத்தில் வராததற்காகச் சிக்ஷையுமுண்டு. இங்ஙனம் நச்வரமான உலகில் மனிதர் இயற்றிய சட்டத்திற்கு உட்பட்டு வேலை செய்கிறோம். நமது இஹபர நன்மையை நாடி சாச்வதனான பரமாத்மா இட்ட கட்டளையான ஸந்த்யையை விடலாமா?

## ஸந்த்யை எனில் யாது?

(1) ஸந்தியில் செய்யும் கர்மா. (பகல் இரவு சேருவது ஸந்தி) (2) நன்றாக த்யாநம் செய்ய வேண்டிய கர்மா. (3) ஜீவனையும் ப்ரும்மத்தையும் சேர்த்து வைக்கும் கர்மா. இங்ஙனம் பல பொருள்

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

கள் உண்டு. சுருங்கச் சொல்லின் ஸந்த்யா காலத்தில் ஸந்த்யா எனும் தேவியைப் பூஜிப்பது என்பது பொருள். அந்ததேவி ஸந்த்யா, ஸாவித்ரீ, காயத்ரீ எனப்படுவாள். மும்மூர்த்திகளும் இதைச் செய்வதால் ஸரஸ்வதீ, லக்ஷ்மீ, பார்வதீ என்ற சக்திகளை விட, ப்ரும்மா விஷ்ணு ருத்ரர்களைவிட, மேலான சிறந்த துரீய சக்தியாம் ஸந்த்யை என்பது. ஆனால் நமது சித்த பரிபாகத்திற்கேற்றபடி இங்ஙனம் 3 சக்திகளாகவோ 3 மூர்த்திகளாகவோ 3 தேகமாகவோ ஸூர்ய மண்டலத்தில் த்யாநம் செய்யும்படி கூறப்பட்டது.

या सन्ध्या साजगत्सूतिः मायातीता सुनिष्कला ।
ऐश्वरी केवला शक्तिः मूर्ति त्रयसमुद्भवा ॥

யாஸந்த்யா ஸாஜகத் ஸூதி : மாயாதீதா ஸுநிஷ்கலா ।
ஐச்வரீ கேவலா சக்தி : மூர்த்தி த்ரய ஸமுத்பவா. ॥

"ஸந்த்யை என்பது உலகைப் படைத்தது. மாயையைக் கடந்தது. நிஷ்கலமானது. ஈஸ்வரியானது. கேவல சக்தியானது. மும்மூர்த்திகளிடமிருந்து உண்டானது" என போதாயன ரிஷி கூறுகிறார். அந்த ஒரே பராசக்தியானது 3 வேளைகளிலும் 3 தனி ரூபத்துடன் விளங்குகிறது. தனிப் பெயர், தனிவர்ணம், தனிவாஹநம் இவைகளால் வேறுபட்டது போல் இருக்கிறது.

### காயத்ரீ த்யாநம்

वालार्कारुण शोण पाटल मुखैः युक्तां कुमारीं गिरं
प्रातर्लोहित विग्रहां भुवि गतां सौख्यात्मिकां राजसीम् ॥
विभ्राणामभयं कमण्डलुमथांभोजाक्षमालां स्रुवं
गायत्रीं हृदि हंसगां भवकरीं श्री ब्रह्मरूपां भजे ॥

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

பாலார்க்காருண சோணபாடலமுகை: யுக்தாம் குமாரீம் கிரம்
ப்ராதர்லோஹித விக்ரஹாம் புவிகதாம் ஸௌக்யாத்மிகாம்—
[ராஜஸீம், ।
பிப்ராணா மபயம் கமண்டலுமதாம்போஜாக்ஷ மாலாம் ஸ்ரு
[வம்
காயத்ரீம் ஹ்ருதி ஹம்ஸகாம் பவகரீம் ஸ்ரீ ப்ரும்மரூபாம்
[பஜே. ॥

காலை ஜபத்தில் ஸூர்யமண்டலத்தினிடையே சிவந்த வர்ணமுள்ளவளாய், குமாரியாய், ரஜோ குணமுள்ளவளாய் ஹம்ஸவாஹநத்தில் ப்ரும்ம ஸ்வரூபிணியாய் (ஸரஸ்வதீ) ரிக்வேத ரூபிணியாய் அபயமுத்ரை, கமண்டலு, தாமரைப்பூ, ஜபமாலை ஸ்ருவம் இவைகளைத் தரித்திருப்பவளாக, காயத்ரீ யாக த்யாநம் செய்யவேண்டும்.

### மாத்யாங்ஹிக ஜபத்தில் ஸாவித்ரீ

मुक्ता पाण्डुर हेम धूसर सितास्यां त्रीक्षणां व्योमगां
मध्यान्हे सितविग्रहां सुयुवतीं सत्यात्मिकां तामसीं ।
खट्वांगाभय शूलकानि दधतीं रुद्राक्षमालामुमां
सावित्रीं वृषवाहनां क्षपकरीं श्रीरुद्ररूपां भजे ॥

முக்தா பாண்டுர ஹேமதூஸர ஸிதாஸ்யாம்
த்ரீக்ஷணாம் வ்யோமகாம்
மத்யாங்ஹே ஸிதவிக்ரஹாம் ஸுயுவதீம்
ஸத்யாத்மிகாம் தாமஸீம் ॥
கட்வாங்காபய சூலகாநி தததீம்
ருத்ராக்ஷமாலாமுமாம்
ஸாவித்ரீம் வ்ருஷவாஹநாம் க்ஷபகரீம்
ஸ்ரீ ருத்ரரூபாம் பஜே. ॥

மத்யான்னத்தில் ஸூர்யமண்டலத்தில் வெண்மை நிறம், தமோகுணம், கட்டில்கால், அபய முத்ரை, சூலம், ருத்ராக்ஷமாலை இந்த ஆயுதங்களைத் தரித்து (உமை) யௌவநமுள்ளவளாகவும், வ்ருஷப

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

வாஹநத்திலிருப்பவளாகவும், மூன்று கண்ணுள்ள வளாகவும், யஜுர்வேதமாகவும், ருத்ரரூபிணியாக வும் த்யாநம் செய்யவேண்டும். அச்சமயம் ஸாவித்ரீ என்று பெயர்.

ஸாயங்காலத்தில் ஸரஸ்வதீ

नीलेन्दीवरमेचकैकवदनां वृद्धस्वरूपां रमां
सायं श्यामल विग्रहां दिविगतां ज्ञानात्मिकां सात्विकीं ।
शंखं चक्रमथाऽभयंच तुलसीमालां करैर्बिभ्रतीं
तार्क्ष्यस्थांच सरस्वतीं स्थितिकरीं श्रीविष्णु रूपां भजे ॥

நீலேந்தீவர மேசகைக வதநாம் வ்ருத்த ஸ்வரூபாம் ரமாம்
ஸாயம்ச்யாமல விக்ரஹாம் திவிகதாம் ஞாநாத்மிகாம்ஸாத்வி [கீம் ।
சங்கம் சக்ரமதாபயஞ்ச துலஸீ மாலாம் கரைர் பிப்ரதீம்
தார்க்ஷ்யஸ்தாஞ்ச ஸரஸ்வதீம் ஸ்திதிகரீம் ஸ்ரீ விஷ்ணு ரூபாம் [பஜே ॥

ஸாயங்காலத்தில் ஸூர்யமண்டலத்தில் ஸரஸ் வதீ என்ற பெயர். கறுத்த வர்ணம், கிழ சரீரம், கருடவாஹநம், சங்க, சக்ர அபயம், துளஸீமாலை க்ஞானஸ்வரூபம், ஸத்வகுணம், ஸாமவேதம் இவை கள் உள்ள விஷ்ணு (லக்ஷ்மீ) ஸ்வரூபமாக த்யாநம் செய்யவேண்டும்.

மூன்று காலத்திலும் வெவ்வேறு ரூபமாக (அந்தந்த காலத்தில் அந்தந்த ரூபிணியாக) த்யாநம் செய்து, ஒவ்வொரு வேளையிலும் ஏகரூபமாய் இருப் பதாகவும் த்யாநம் செய்யவேண்டும். இதற்குத் தான் ஸந்த்யை என்று பெயர்.

श्वेत श्यामल लोहित त्रिवदनैः युक्तां त्रिमूर्त्यात्मना
गायत्र्यक्षरमालिकां विलसदग्न्यर्केन्दु तेजोमयीं ।
सत्यज्ञान सुखात्मिकां समगुणां सन्ध्यां त्रयीमातरं
ओंकारात्मक तत्वपीठ निलयां श्रीलिंगरूपां भजे ॥

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

ச்வேத ச்யாமல லோஹிதைஸ்த்ரி வதனை : யுக்தாம் த்ரிமூர்த்யாத்மனா
காயத்ர்யக்ஷர மாலிகாம் விலஸதக்ந்யர் கேந்துதேஜோ மயீம் ।
ஸத்யக்ஞான ஸுகாத்மிகாம் ஸமகுணாம் ஸந்த்யாம் த்ரயீமாதரம்
ஓங்காராத்மக தத்வபீட நிலயாம் ஶ்ரீ லிங்கரூபாம் பஜே ॥

வெண்மை, கறுப்பு, சிவப்பு என்ற மூன்று வர்ணமுள்ள 3 முகமுள்ளவளும், த்ரிமூர்த்தி வடிவமானவளும், காயத்ரியின் அக்ஷரங்களாலாகிய மாலையால் ப்ரகாசிப்பவளும், அக்நி ஸூர்யன் சந்த்ரன் ஆகிய இம்மூன்று தேஜோமயமானவளும், ஸத்யக்ஞான ஸுகவடிவமானவளும், ஸமமான முக்குணமுள்ளவளும், ஸந்த்யை என்ற பெயருள்ளவளும், வேதத்தின் தாயும், ஓங்காரவடிவமான தத்வபீடத்தில் லிங்கரூபமாக அமைந்தவளுமான தேவியைப் பஜிக்கிறேன். முதல் 3 காலத்தில் கூறப்பட்டவை ஸ்தூலம். இது ஸூக்ஷ்மம். தனித் தனியாக இருப்பது வ்யஷ்டி எனப்படும். எல்லாம் சேர்ந்தபோது ஸமஷ்டி எனப்படும்.

ஸமஷ்டிரூப காயத்ரீ த்யானம்

मुक्ताविद्रुम हेमनीलधवलच्छायैः मुखैः त्रीक्षणैः
युक्तामिन्दुनिबद्धरत्न मकुटां तत्वार्थवर्णात्मिकाम् ।
गायत्रीं वरदाभयां कुशकशाः शुभ्रंकपालं गदां
शंखं चक्रमथारविन्दयुगलं हस्तैर्वहन्तीं भजे ॥

முக்தா வித்ரும ஹேம நீல தவளச் சாயைர் முகை: த்ரீக்ஷணை:
யுக்தாம் இந்து நிபத்த ரத்ன மகுடாம் தத்வார்த்த வர்ணாத்மிகாம் ।
காயத்ரீம் வரதாபயாங்குச கசா : சுப்ரம் கபாலம் கதாம்
சங்கம் சகரமதாரவிந்த யுகளம் ஹஸ்தைர் வஹந்தீம் பஜே ॥

முத்து, பவழம் ஸ்வர்ணம், கறுப்பு, வெளுப்பு ஆகிய வர்ணங்களுள்ள 5 முகமுள்ளவளும், (ஒவ்வொரு முகத்திலும்) 3 கண்கள் உள்ளவளும், சந்த்ர கலையைத் தலைமீதணிந்தவளும், தத்வார்த்தம் உள்ள

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

தான எழுத்து ரூபமானவளும், வரதம், அபயம், அங்குசம், பாசம், வெளுப்பான கபாலம், கதை, சங்கம், சக்ரம், இருதாமரை இவைகளைக் கரத்திலேந்திய வளுமான காயத்ரியைப் பஜிக்கிறேன்.

இது ஒன்றைத்தான் பெரும்பாலும் எல்லாரும் 3 காலத்திலும் கூறி த்யாநம் செய்வர்.

## த்யானத்தில் பல ஏன்?

காயத்ரியின் பொருள் பரமாத்மாவே. அது அங்கு இங்கு எனாதபடி எங்கும் உள்ளது. ஸத்சித் ஆநந்த ரூபமானது. உருவும் பெயரும் இல்லாதது. வாக்கிற்கும், மநதிற்கும் எட்டாதது. அதைச் சிற்றறிவால் அறியமுடியாது. சிறிய மநத்தால் த்யாநம் செய்யமுடியாது. ஆதலின் முதலில் ஸூர்யனையும் ஸூர்ய மண்டலத்தில் காயத்ரீ, ஸாவித்ரீ, ஸரஸ்வதீ, ஸமஷ்டி காயத்ரீ என்றும் பல வாறாக த்யாநம் செய்யும்படி கூறப்பட்டது. ஒன்றையே 3 வேளையிலும் நித்யம் த்யாநம் செய்தால் அதே மநதில் தங்கிவிடும். ஒன்று ஒன்றாக த்யாநம் செய்து பழக்கினால் ஒன்றில் நிலைக்காமல் த்யான சக்தி வ்ருத்தியாகும். நாள் ஆக ஆக இந்த உருவங்களையும் விட்டு விட்டால் மநம் ஒன்றையும் நினையாமல் அசைவற்று நிற்கும். மநோ வ்ருத்திகள் ஒழிந்தால்தான் க்ஞாநம் நிலைக்கும். முக்தி உண்டாகும். "ப்ரும்ம அப்யேதி" என்று வேதங் கூறிய பேரின்பத்திற்கு இந்த த்யாநமும், ஸந்த்யையும் மிகப் பயன்படும். ஆதலின் ஸந்த்யா வந்தந கர்மா படிப்படியாக மோக்ஷ ஸாதநமே.

## ஸந்த்யையில் முக்யமானவை

எது இல்லாவிட்டால் ஸ்வரூபம் நாசம் அடையுமோ அதே முக்யமாம். கண், காது முதலியவை

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

களும், விரல், கால், கைகளும் இல்லாவிடில் ஒருவன் ஜீவிக்கலாம். ப்ராணன் இல்லாவிடில் பிழைத்திருக்க முடியாது. அதேபோல் ஸந்த்யா வந்தநத்தில் மிக மிக முக்யமானவை சில உள. அவை உயிர்போல் ஆதரவுடன் அனுஷ்டிக்கத் தக்கவை. இதனால் மற்றதைவிடலாம் அல்லது ஆதரவில்லாமல் செய்யலாம் என்று எண்ணக் கூடாது. அவஸரத்தில், ஆபத்தில் கூட, முக்ய மான இவைகளை நிறுத்தி நன்ருகச் செய்யத்தான் வேண்டும் என்றே பொருள். அவை யாவை? அர்க்ய ப்ரதாநம், ஸந்த்யோபாஸனம் (அர்க்யத்திற் குப் பிறகு அஸாவாதித்யோ என்று செய்யும் த்யா நம்), காயத்ரீ ஜபம், உபஸ்தாநம் என்ற நான்கும் ஸந்த்யாவந்தநத்தில் மிக மிக முக்யமானவை. ஸந்த்யா கர்மாவின் ஜீவநாடிகள். மற்றவை இவை களுக்கு அங்கங்களாம். அங்கங்களில் சில பூர்வ அங்கம். சிலது உத்தர அங்கமாம். இவை தவிர பாஹ்ய அங்கம் சில உள. ஸ்நாநம், கச்சம் அணிதல், புண்ட்ரம் தரித்தல், சுத்தமான யக்ஞோ பவீதம், சிகை இவை பாஹ்ய அங்கங்கள். ஆச மநம். ஸங்கல்பம், மார்ஜநம் (ஆபோஹிஷ்டா), ப்ராசநம் (ஸூர்ய:ச, ஆப: புநந்து, அக்நி:ச), மறுமுறை ப்ரோக்ஷணம் (ததிக்ராவிண்ண:), முகர்ந்துவிடல் (த்ருபதாதிவ), ஜப ஸங்கல்பம், ப்ராணயாமம் முதலியவை பூர்வ அங்கம் எனப் படும். நவக்ரஹாதி தர்ப்பணம் (ஆதித்யம் தர்ப யாமி), ப்ராணயாமம், திக்வந்தனம் முதலியவை உத்தர அங்கமாம். நமது ப்ராணன் இருப்பிட மான ஹ்ருதயத்திற்கு மேலே கைகள் காது முதலிய சில அவயவங்களும் அதனடியில் ஜீரணக் கருவி, மல ஜலத்வாரங்கள், கால் முதலிய அவய

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

வங்களும் அமைந்திருப்பது போலாம் அது. ஆதலால் ஸந்த்யாவந்தனத்தைக் காலத்தில் நிறுத்தி அங்க உப அங்கங்களுடன் செய்யவேண்டும்.

## அர்த்தம் தெரிந்தே செய்யவேண்டுமா?

"அர்த்தம் தெரியாமல் பேசக்கூடாது. பொருள் அறியாமல் ஒன்றைச் செய்யவுங்கூடாது. அப்படி செய்பவை பூர்ண பயனைத்தராது. அர்த்தம் அறியாமல் வேதத்தை ஓதுபவன், மந்த்ரங்களைக் கூறுபவன், மூட்டை சுமப்பவன், மரம்போலாவன். பொருள் உணர்ந்து ஒன்றைச் செய்தால் தான் அது அதிகப் பயனைத்தரும். வீர்யமுள்ளதாகும்" என யாஸ்கரது நிருக்த மெனும் நூல் கூறுகிறது. அது ஒரு வேத அங்கம். எதையும் "இதை எதற்காகச் செய்கிறோம்? இதனால் உண்டாகும் பயன் யாது? இதில் பூஜிக்கப்படுகிற தெய்வம் எது? அது எத்தகைய குணம் உள்ளது? என்பவைகளை நன்கு அறிந்தே செய்யவேண்டும். நாம் உண்ணும் உணவு கூட, அதன் ஸ்வரூபத்தை நன்றாக அறிந்தால்தான் அதிக ருசியைத் தருகிறது. ஆதலால் ஒவ்வொரு கர்மாவையும் அதில் உபயோகமாகும் மந்த்ரங்களின் பொருளையும் நன்றாக அறிந்தே செய்யவேண்டும். "அதை அறிந்த பின்தான் செய்வது. பொருள் தெரியாவிடில் அது பயனைத்தராது. ஆதலால் அதைச் செய்வதில்லை" என்று எண்ணலாகாது. கர்மாவை விடாமல் அநுஷ்டித்துக் கொண்டே அதன் பொருளை அறிந்துகொள்ள முயற்சிக்க வேண்டும். பொருளை அறியாவிடில் பூர்ண பயன் கிடையாது. அந்த கர்மா மிக வீர்யமுள்ளதாக இராது என்றே அதன் கருத்து. அடியோடு

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

பயனே இல்லை என்பது கருத்தல்ல. தெரிந்து செய்தாலும், அர்த்தம் தெரியாமலே செய்தாலும் பயனுண்டு. தெரிந்து செய்வது அதிக பலனைத் தரும். இப்படி பலத்தில் தாரதம்யபேதம் உண்டு. ஒருவன் இது விளக்கெண்ணெய்என்று தெரியாமல் அதைச் சாப்பிட்டுவிட்டால் அது தன் பயனான ப்ரவ்ருத்தியைச் செய்துதான் நிற்கும். குழந்தை தீயைத் தொட்டால், "சுடுமென அறியாமல் தொட்டது" என அது சுடாமல் விடுமா? அங்ஙனம் ஸந்த்யா வந்தநத்திற்கு அர்த்தம் தெரியாவிடினும், அநுஷ்டித்தால் அது நிச்சயமாகப் பயனைத்தந்தே தீரும். அர்த்தத்தைத் தெரிந்து கொள்ளவேண்டியது நம் பொறுப்பு. அதைக் கூறக் கூடிய உத்தமரைத் தேடி அறிய அவகாசம் இல்லாதவர் பொருட்டே இந்நூலை வெளியிடுகிறோம்.

## எல்லோருக்கும் ஒரே ஸந்த்யையா?

ரிக்வேதம், யஜுர் வேதம், ஸாமவேதம் என வேதம் மூன்றாக வகுக்கப் பட்டுள்ளது. இதைப் பிரித்ததால் "வேதவ்யாஸர்" என்ற பட்டத்தைப் பெற்றார் பராசரரது புதல்வர். ரிக் வேதத்தைப் பைலர் என்ற சிஷ்யன் மூலமாக ப்ரகாசம் செய்தார். அந்த வேதம் (8) அஷ்டகங்களாகப் பிரிக்கப்பட்டது. ஐதரேயமும், கௌஷீதகீ ப்ராம்மணமும் இதைச் சார்ந்ததாகும். இந்த வேதத்தைத் தழுவினவருக்கு ஆச்வலாயநர், ஸாங்க்யாயனர் என்ற மஹர்ஷிகள் கல்பஸூத்ரம் செய்தனர். அது ஶ்ரௌத ஸூத்ரம், க்ருஹ்ய ஸூத்ரம் என இருவகை. முற்கூறிய ச்ரௌதம் 3 அக்நிகளால் செய்யும் யாகத்தைக் கூறுவது. பின்னது 40 ஸம்ஸ்காரங்களையும்,ஸந்த்யாவந்தனம்,ச்ராத்தம்

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

முதலியவைகளேயும் பற்றி கூறுவதாகும். ஆதலின் ரிக்வேதிகள் அந்த ஸூத்ரத்தைப் பின்பற்றி அவர் கூறிய வண்ணமே கர்மாக்களைச் செய்யவேண்டும். இங்ஙனமே மற்ற வேதங்களுக்கும் வெவ்வேறு ஸூத்ரங்கள் உள. அவரவர் அவரவரது ஸூத்ரத்தைத் தழுவியே கர்மானுஷ்டானங்களைச் செய்யவேண்டும். ஆதலால் மூன்று வேதத்தைத் தழுவியவர்களுக்கும் ஸந்த்யாவந்தனம் என்ற ஒரு கர்மா உண்டெனினும் சிறிது சிறிது மாறுதல் உண்டு. காயத்ரீ மாத்ரம் எல்லோருக்கும் ஒன்றேயாம்.

யஜுர் வேதத்தை வ்யாஸர், வைசம்பாயநர் மூலமாக ப்ரசுரமாக்கினர். அந்த யஜுர் வேதம் சுக்லயஜுஸ், கிருஷ்ணயஜுஸ் என இரண்டாகப் பிரிந்தது. சதபத ப்ராம்மணம், மைத்ராயணீயம் முதலியவை இதைச் சார்ந்தவை. க்ருஷ்ண யஜுர் வேதத்திற்கு ஆபஸ்தம்பர், போதாயனர், வைகானஸர், பாரத்வாஜர், வராஹர், ஸத்யாஷாடர் முதலிய பலர் க்ருஹ்ய ஸூத்ரங்களை எழுதியுள்ளார்கள். ஶுக்ல யஜுஸ்ஸுக்கு காத்யாயநர் பாஸ்கரர் எழுதினர்கள். இவைகளில் ஒன்றுக்கொன்று மற்ற கர்மாக்களில் மாறுதல் உண்டு. என்றாலும், ஸந்த்யாவந்தனத்தில் அதிக பேதமில்லை. ஸாம வேதத்தை ஜைமினி மூலமாக ப்ரசுரம் செய்தார். சாந்தோக்யம், தண்டியம், தலவகாரம் என்பவை இதைச்சார்ந்தவைகள். இதற்குக் கல்ப ஸூத்ரம் எழுதியவர், த்ராஹ்யாயணர் கோபிலர். ஸந்த்யாவந்தனத்தில் மூன்று வேதிகளுக்கும் மாறுபாடு உண்டு. எல்லோருக்கும் காயத்ரீ மந்த்ரம் ஒன்றே. அதில் பேதமில்லை. ரிக்வேத ஸந்த்யை, யஜுர்வேத ஸந்த்யை, ஸாமவேத ஸந்த்யை ஆக



CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

மூன்றுக்கும் மந்த்ரம் மந்த்ரார்த்தம் இவைகளை இதில் வெளியிடக் கருதினோம். த்ரவ்ய ஸஹாயமில் லாததால் யஜுர் வேத ஸந்த்யையை மாத்ரம் இப்போது வெளியிடுகிறோம். ஒரே ஸூத்ரமாயி னும் ஆந்த்ரர், மத்வர், வைஷ்ணவர், ஸ்மார்த்தர் ஆகியவருள் சிறிது சிறிது பேதம் உண்டு. எல் லோருக்கும் பொதுவான சில விதிகளை முதலில் அறிவோம்.

## பொதுவான ஆசாரம்

"ஸ்நாத்வா கர்மாணி குர்வீத" என்பது சாஸ்த்ரம். அதாவது ஸ்நாநம் செய்த பிறகே ஸகல கர்மாக்களையும் செய்யவேண்டும். நாம் ஊத்தப் பல்லுடன் ஒன்றைச் சாப்பிட விரும்புவோமா? தேவர்களுக்குப் பூஜை செய்வது போலல்லவா ஸந்த்யா வந்தனம்! ஆதலால் தேஹ ஆரோக்ய முள்ளவர் அதிகாலையில் எழுந்து குளிர்ந்த ஜலத் தில் ஸ்நாநம் செய்யவேண்டும். உடல் சுகமில்லாத வர் வென்னீரிலேனும் முழுகவேண்டும். அல்லது பழய வஸ்த்ரத்தை விலக்கி ஈரத்துணியால் உடலைத் துடைத்துக்கொண்டு மடியான வஸ்த்ரம், பட்டு, கம்பளி இவைகளில் ஏதேனும் ஒன்றை உடுத்திக் கொண்டு, கால் அலம்பி, ஆசமநம் செய்து ஸந்த்யா வந்தனம் செய்ய ஆரம்பிக்கவேண்டும். மலசுத்தி ஆனபிறகே ஸ்நாநம் செய்யவேண்டும். ஸ்நாநம் செய்த பிறகே ஸந்த்யை செய்வதென காலதாம தம் செய்யலாகாது. விவாஹமானவர் பஞ்ச கச்ச மணியாமல் ஸந்த்யை செய்தால் அது பயனைத் தராது. அங்ஙனம் சிகை இல்லாமலிருந்தாலும் பயனைத்தராது. அனைவரும் சிகை வைத்துக் கொள்வதே ந்யாயம். தர்மம். எந்தக் காரணத்

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

தாலோ சிகை வைக்க முடியாதவர் ஸ்ராத்தம் ஸந்த்யா முதலிய கர்மாக்களில் 3 தர்ப்பை நுனியை வலது காதில் வைத்துக்கொண்டு கர்மாவைச் செய்யவேண்டும். இவைகளைப் போலவே யக்ஞோபவீதம் என்ற பூணூல் சுத்தமாக இருக்க வேண்டும். அதில் சாவியையோ, தாயத்து அல்லது இஷ்டமானவரது உருவமுள்ள லோஹங்களையோ தரிக்கலாகாது. அவைகளைத் தரித்தாலும், ஜலமல விஸர்ஜன காலத்தில் மாலையாக இல்லாமல் யக்ஞோபவீதமாகவே தரித்தாலும் கர்மா பயனற்றதாகும். பரம பவித்ரமானது பூணூல். வேதோக்த கர்மாவைச் செய்ய யோக்யதை அளிக்கின்றது. அதையே அசுத்தமாக்கி விட்டால் கர்மா எங்ஙனம் பயனைத் தரும்? ஆதலின் ஸ்நாநம் செய்து மடி உடை உடுத்தி சிகையுடன் சுத்த யக்ஞோப வீதத்துடன் கர்மாவை ஆரம்பிக்க வேண்டும்.

## ஆசமனம்

மூன்று முறை ஜலத்தை ப்ரும்மதீர்த்தத்தால் உட்கொண்டு இருமுறை உதட்டைத் துடைத்து கேசவாதி நாமாக்களை கூறி, குறிப்பிட்ட அவயவங்களைத் தொடுவது ஆசமனமாம். கைவிரல்களின் நுனியால் ஜலம் விடுவது தேவதீர்த்தம். கட்டவிரல் பக்கமாக விடுவது பித்ரு தீர்த்தமாம். அடிப்புரத்தால் விடுவது ப்ரும்மதீர்த்தமாம். சுண்டுவிரல் பக்கமாக விடுவது ரிஷிதீர்த்தமாம். ஒவ்வொரு கர்மாவின் ஆரம்பத்திலும் முடிவிலும் இந்த ஆசமனம் அவச்யம் செய்யவேண்டும். சில கர்மாவில் இடையிலும் செய்யவேண்டும். வேதத்தால் யாகத்தில் கூறப்பட்டது ஸ்ரௌத ஆசமனம் என்று பெயர். இந்த ஆசமனம், ஸ்ம்ருதி ஆசமனம், புராண

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

ஆசமனம் எனப் ப்லவகை. அனுஷ்டானத்தில் அநேகமாக பலர் அச்யுதாயநம: அனந்தாயநம: கோவிந்தாயநம: என்று கூறி 3 முறை ப்ரும்ம தீர்த்தத்தால் அருந்துகின்றனர். கேசவ முதல் தாமோதர வரை 12 நாமங்களைக் கூறி இந்த்ரியங்களைத் தொடுகிறோம். இதிலும் சிலரிடம் பேதம் உண்டு. மூன்று முறை (ஒரு மந்த்ரத்தையும் கூறாமல்) தீர்த்தமருந்துவது ஒரு முறை. ப்ரணவத்தைக் கூறி அருந்துவது மற்றோர் முறை. பூ: புவ: ஸுவ: என்பது ஒருவகை. பூஸ்வாஹா, புவஸ்வாஹா, ஸுவஸ்வாஹா என்பது ஒருவகை. ரிக்வேதாய ஸ்வாஹா, யஜுர் வேதாய ஸ்வாஹா, ஸாம வேதாய ஸ்வாஹா என்பது ஒருவகை. சிவ, மஹேஸ்வர, சம்போ எனக்கூறி ஜலம் அருந்துவது ஒருவகை. அவரவர் முன்னோர் செய்து வந்தபடி ஆசமனம் செய்யவேண்டும். புதிதாக ஒன்றை ஆரம்பிக்கக்கூடாது.

## ஆசமனத்தில் கவனிக்க வேண்டியவை

ஜலத்தில் நின்று கொண்டு ஆசமனம் செய்தால் முழங்கால் மறையும் அளவு ஜலத்தில் நிற்க வேண்டும். இடது கையால் ஜலத்தைத் தொட வேண்டும். குளம் நதிகளில் உட்கார்ந்து செய்வதானால் வலது காலைக் கரையில்வைத்து உட்கார்ந்து இடது காலை ஜலத்தில் வைத்துக்கொண்டு, இடது கையால் ஜலத்தைத் தொட்டுக்கொண்டே ஆசமனம் செய்யவேண்டும். வீட்டில் செய்வதானால் இரு கால்களையும் குத்திட்டுக் கொண்டு இரு முழங்கைகளையும் அதற்குள் வைத்துக்கொண்டு ஆசமனம் செய்யவேண்டும். சுண்டுவிரலையும் மோதிர விரலையும் நீட்டிவிட்டு மற்ற மூன்று விரல்களையும் சிறிது

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

வளைத்தால் உள்ளங்கை குழிவாக இருக்கும். அதில் ஜலத்தை எடுத்துக் கொண்டு அந்த ஜலம் ஹ்ருதயம் வரை போகும் அளவு உட்கொள்ள வேண்டும். முதலில் அருந்தியது உட்சென்ற பிறகே மற்றுமிருமுறை தனித்தனியே உட்கொள்ள வேண்டும். மூன்றையும் சேர்த்துக் குடிக்கலாகாது. அந்த ஜலம் உளுந்து முழுகும் அளவு அல்லது மாஷம் எனும் ரேகை முழுகும் அளவிருக்கவேண் டும். அந்த தீர்த்தம் உஷ்ணமாகவோ நுரை உள்ள தாகவோ உப்பு அல்லது வேறு எந்த ரஸம் கலந்த தாகவோ இருக்கக் கூடாது. குழாயில் அல்லது மேலிருந்து விழும் நீரால் ஆசமனம் செய்யக் கூடாது. ஸமுத்ர ஜலத்தால் ஆசமனம் செய்யக் கூடாது. தர்ப்பணம் செய்யலாம். ஆசமனம் செய்தபின் இரு முறை உதட்டைக் கையால் துடைத்து ஒவ்வொரு முறையும் கை அலம்ப வேண்டும். ரோமம் இல்லாத உதடு எப்போதும் எச்சிலாகும். அதைத் துடைப் பதால் கையை அலம்பவேண்டும். இதை ப்ரும்ம யக்ஞம் பற்றி கூறும் வேதம் "3 முறை ஆசமனம் செய்து இருமுறை துடை" என போதிக்கின்றது. வைதிக ஸத்கர்மாக்களை ஆரம்பிக்கும் போது ஆசமனம் செய்தால் அது இந்த்ரியங்களைச் சுத்த மாக்கி சுறுசுறுப்புடன் அதைச் செய்ய யோக் யதையை உண்டு பண்ணுகிறது. அன்றியும் சிறிது சிறிதாகவும் உட்கொள்ளும் சீதளமான ஜலம் கபத்தை அகற்றி நாடிகளுக்கு ஒரு சுறு சுறுப்பைத் தருகிறது என வைத்யர் கூறுவர். பிறர் ஆசமனம் செய்த மிகுதி ஜலத்தால் ஆசமனம் செய்யக் கூடாது. கேசவ முதலிய 12 நாமாக் களைக் கூறி ஜலத்துடன் குறிப்பிட்ட இடங்களைத் தொடவேண்டும். ஆசமனம் செய்ய பகவன் நாமா

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

வைக் கூறுவது போல் முகத்திலுள்ள இந்த்ரியங் களைத் தொடவும் 12 பகவன் நாமாக்களை கூறும் படி சிஷ்டர்களான பெரியோர் ஏற்படுத்தினர். இந்த்ரியங்களைத் தொடுவதுடன் பகவன் நாம உச்சாரணத்தால் ஒருவகை புண்யமும் கிடைக் கட்டும் என்பது அவர்கள் நோக்கம். அங்ஙனமே ஊர்த்வ புண்ட்ரம் இடும்போதும் பகவன் நாமாக் களைக் கூறவேண்டும். அதனால் தான் நாமம் இடுவது என்று அது வழங்கப்படுகிறது.

மும்முறை நீர் அருந்தி இருமுறை உதட்டைத் துடைத்துக் கேசவாதி நாமாக்களைக் கூறி குறிப் பிட்ட விரல்களால் குறிப்பிட்ட இடத்தைத் தொட வேண்டும். (இந்த ஆசமனம் தைத்திரீய சாகையில் ப்ரும்ம யக்ஞத்திற்காக வேதங்கூறியதைப் பின் பற்றி மஹர்ஷிகளால் விதிக்கப்பட்டது). கேசவ, நாராயண என்று கட்ட விரலால் வலது, இடது கன்னங்களையும்; மாதவ, கோவிந்த என்று பவித்ர விரலால் வலது இடது கண்களையும்; விஷ்ணோ, மதுஸூதன என்று ஆள்காட்டி விரலால், வலது, இடது, மூக்குகளையும்; த்ரிவிக்ரம, வாமன என்று சுண்டுவிரலால், வலது, இடது காதுகளையும்; ஶ்ரீதர, ஹ்ரிஷீகேச என்று நடுவிரலால் வலது, இடது தோள்களையும்; பத்மநாப என்று எல்லா விரல் களாலும் மார்பிலும்; தாமோதர என்று கூறி எல்லா விரல்களாலும் சிரஸ்ஸிலும் தொடவேண் டும். (இதில் சில பேதங்கள் உண்டு. அவரவர் முன்னோர் கூறிய வண்ணம் செய்யவேண்டும்.)

எந்தக் கர்மாவையும் ஸங்கல்பம் செய்து கொண்டுதான் ஆரம்பிக்கவேண்டும். ஸங்கல்பத் தில் விநாயகரை நாடித் தலையில் குட்டிக்கொள்ளு தல் (சிலருக்கில்லை) ப்ராணாயாமம் செய்தல்,

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

பின்னர் வலத் துடைமீது, இடது கை கீழும் வலது கை மேலுமாக வைத்துக்கொண்டு கால தேசங்களைக் கூறி இப்பயனுக்காக இன்ன கர்மாவைச் செய்கிறேன் என்பதே ஸங்கல்பத்தின் கருத்தாம்.

### ப்ராணுயாமம்

நமது சரீரத்தில் ஸஞ்சரிக்கும் வாயுவை அடக்குவது ப்ராணுயாமம் எனப்படும். ப்ராணன் என்ற சொல்லால் ஜீவனையும் அழைக்கிறேம். உயிர் என்றும் ப்ராணனைக் கூறுகிறேம். ப்ரதி தினம் நமது முயற்சி இல்லாமலே 21 ஆயிரத்துச் சொச்சம் மூச்சுவிட்டுக் கொண்டிருக்கிறேம். இந்த மூச்சை விடாமல் அடக்கி முற்காலத்தவர் நீண்ட ஆயுளைப் பெற்றனர். மனத்தை அடக்குவதற்காகத் தோன்றிய யோக ஶாஸ்த்ரம் இந்த ப்ராணுயாமத்தையே முதல் ஸாதநமாகக் கொண்டுளது. தங்கம் முதலிய லோஹங்களிலுள்ள தோஷம் தீயில் வைத்து ஊத ஊதச் செல்கிறது. அங்ஙனமே ப்ராணுயாமம் செய்யச் செய்ய நம் பாபம் அகலுகிறது. தர்ம சாஸ்த்ரம் ப்ராணுயாமத்தை ப்ரதி தினம் 12 (அல்லது 16) முறை செய்பவர் ஸகல பாபமும் அகன்று சுத்தமாவர் எனக் கூறுகின்றது. கல்பஸூத்ரமும் கர்மாக்களிடையே "ப்ராயச்சித்தம் ப்ராணுயாம:" என்று இதை ஒரு ப்ராயச்சித்தமாக வர்ணிக்கிறது. இது நமது நாடிகளில் உள்ள தோஷங்களை அகற்றுகிறது. ஆதலால் அடிக்கடி ஸந்த்யாவந்தன ஜபத்திலும் இது விதிக்கப்பட்டுள்ளது.

ஸங்கல்பத்தில் ஒன்று, அர்க்ய ஸங்கல்பத்தில் ஒன்று, ஆதித்ய உபாஸனையில் ஒன்று, ஜப ஸங்கல்பத்தில் ஒன்று, காயத்ரிக்கு முன்பு 10, உபஸ்

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

தாக ஆரம்பத்தில் 1, ஆக 15 ப்ராணுயாமம், ஒவ்வொரு வேளையிலும் விதிக்கப்பட்டுள்ளது.

ஸகர்ப்ப ப்ராணுயாமம், அகர்ப்ப ப்ராணுயாமம் என இருவகைப்படும். அதற்குரிய மந்த்ர ஜபத்துடன் மூச்சை அடக்குவது ஸகர்ப்ப ப்ராணுயாமம். ஜபம் த்யானமில்லாமல் மூச்சை மாத்ரம் அடக்குவது அகர்ப்ப ப்ராணுயாமம். கர்ம அங்கமாகச் செய்யும்போது ஸகர்ப்பமும், மனதை அடக்க அகர்ப்ப ப்ராணுயாமமும் செய்யலாம் பூரகம், கும்பகம், ரேசகம் என மூன்று வகையாகவும் கூறப்படும். ஒரு மூக்கைக் கட்டைவிரலால் பிடித்துக்கொண்டு மற்றொரு நாஸிகையால் வாயுவை உள்ளே இழுப்பது பூராக ப்ராணுயாமம். இரு மூக்குகளையும் அடைத்து மூச்சே விடாமலிருப்பது கும்பகம். காற்றை இழுத்த மூக்காலில்லாமல் வேறு மூக்கால் காற்றை விடுவது ரேசகமாம். இம் மூன்றிலும் முன் கூறியபடி ஸகர்ப்பமாகவும், அகர்ப்பமாகவும் செய்யலாம். நமது உடலில் சிறியதும் பெரியதுமாக 27,000 நாடிகள் இருக்கின்றன. அவை கந்தமூலம் என்ற மூலாதாரத்திலிருந்து கிளம்பி ஒவ்வொரு உருவிலும் பறவி நிற்கின்றன. முதுகு எலும்பிற்கு வீணு தண்டம் என்று பெயர். அது வீணையின் தண்டு போலுளது. அதன் அடியிலிருந்து கிளம்பி சிரஸ்ஸிற்குப் போகின்ற நாடி ஸுஷும்ஞு எனப்படும். அதன் இடது புறமாகச் செல்வது இளா. வலது புறமாகச் செல்வது பிங்களா எனப்படும். இவ்விரண்டும் கந்த மூலத்திலிருந்து புருவம்வரை நேராக வருகின்றன. அங்கிருந்து இளா இடது நாஸிகையையும், பிங்களா வலது நாஸிகையையும் வந்தடைகிறது. ஆதலால் இடது மூக்கு வழியாக மூச்சை இழுத்து பூரகம்

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

செய்து, ஸுஷும்னையில் நிறுத்திக் கும்பகம் செய்து, வலது நாஸிகையால் மூச்சைவிட்டு ரேசக ப்ராணாயாமம் செய்யவேண்டும். இம்மூன்றும் சேர்ந்தே ஒரு ப்ராணாயாமம் எனப்படும். இப்படிச் செய்ய முடியாதவர், இரு நாஸிகைகளையும் அடைத்து ப்ராணாயாம மந்த்ரத்தை ஜபித்துக் கும்பகப்ராணாயாமமாவது செய்யவேண்டும். மூச்சை அடக்காமல் மந்த்ரத்தை மாத்ரம் ஜபிப்பது மாப் பிள்ளை இல்லாமல் கல்யாணம் செய்வது போலாகும். ப்ராணாயாமம் மூச்சை அடக்குவது என்ற சொல் லுக்கே அதில் இடமில்லை. இங்ஙனம் விதிப்படி மூச்சை அடக்குவதால் ஆயுளும் ஆரோக்யமும் வ்ருத்தியாகும். பாபம் அகலும். நோயும் விலகும். மனமும் சுத்தமாகும்.

பூரகத்திலும் ரேசகத்திலும் மெதுவாகச் சப் தம் கேளாமல் வாயுவை இழுத்து விடவேண்டும். பூரக ப்ராணாயாமத்தில் நாபியின் நடுவில் ப்ரும்மா வையும், கும்பகத்தில் ஹ்ருதயத்தில் விஷ்ணுவை யும் ரேசகத்தில் நெற்றியில் சிவனையும் த்யாநம் செய்யவேண்டும். இப்படி த்யாநத்துடன் செய்தால் ப்ரும்ம லோகம், வைகுண்டம், கைலாஸம் ஆகிய லோகங்களையும் பெறலாம்.

ப்ராணாயாமம் செய்யும்போது, ஆள்காட்டி விரலையும் நடுவிரலையும் மடக்கிக்கொண்டு கட்டை விரலாலும், மோதிரவிரல், சுண்டு விரல்களாலும் மூக்கைப் பிடித்துக்கொண்டு ப்ராணாயாமம் செய்ய வேண்டும். ஒவ்வொரு ப்ராணாயாமும் முடிந்தபின் வலது காதைத் தொடவேண்டும். வலது காதில் கங்கை இருப்பதால் கங்கா ஜலத்தால் கையைச் சுத்தம் செய்து கொள்கிறோம்.

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

ப்ராணாயாமத்தில் முதலில் ப்ராணவம். பிறகு ஏழு வ்யாஹ்ருதிகள். பிறகு காயத்ரீ. அதன் பின் காயத்ரீ சிரஸ் என்ற 4 மந்திரங்களைக் கூறுகிறோம். ஜபத்தில் ப்ராணயாமம் செய்யும்போது இந்நான்கிற்கும் ரிஷி, சந்தஸ், தேவதை ஆகியவைகளைக் கூறுகிறோம். ப்ரணவம் சுத்த ப்ரும்மத்தையும், ஏழு வ்யாஹ்ருதிகள் ப்ரணவத்துடன் கூறப்படுவதால் பரமனால் படைக்கப்பட்டு பரமனாகவே உள்ள ஏழுலோகங்களையும், (தலையை இழுத்தால் வாலும் வருவதுபோல், பாதாலாதி கீழே உள்ள 7 ஆக 14 லோகங்களையும்) காயத்ரியைக் கூறுவதன் மூலமாக நமது புத்திக்குச் சக்தி அளித்துத் தூண்டுபவரான பரமாத்மாவையும், காயத்ரீ சிரஸ் மூலம் ஜலமாகவும் ஜ்யோதிஸ்ஸாகவும், ரஸமாகவும், மூவ்வுலகமாயுள்ள பரப்ரும்மத்தையே த்யானம் செய்கிறோம். இச்சிறந்த பரமாத்ம ஸ்வரூப த்யானத்தால் பாபங்கள் அகலுமெனக் கூறவும் வேண்டுமா?

## மார்ஜனம்

ஆபோஹிஷ்டா என்ற மந்த்ரத்தால் ஜலதேவதைகளை ப்ரார்த்தித்துத் தலைமீது ஜலத்தை ப்ரோக்ஷித்துக் கொள்ளவேண்டும். இந்த மந்த்ரங்களின் பொருள் நமக்கு இம்மையிலும் மறுமையிலும் இன்பமுண்டாக வேண்டுவதேயாம். இன்பம் என்பது சாதாரணமான வாழ்வுக்கு வேண்டியது மாத்ரமல்ல. ப்ரும்மானந்தமெனும் மோக்ஷத்திற்கு அடிகோலுவதாகும். இந்த மந்த்ரம் 9 வாக்யமாக அமைந்துள்ளது. ஒவ்வொரு வாக்யம் முடியும்பொழுதும் ஜலத்தைத் தலைமீது ப்ரோக்ஷித்துக் கொள்ள வேண்டும். எட்டாவது (யஸ்யக்ஷயாய ஜின்வத) என்ற வாக்யத்தின் முடிவில் மாத்ரம் இரு கால்

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

களின் மீது ப்ரோக்ஷித்துக் கொள்ளவேண்டும். நாம் ப்ரோக்ஷிக்கும் ஜலம் நமது தலைமீதே பட வேண்டும். பூமியிலோ வேறெங்கோ சிந்தக் கூடாது. அப்படிச் சிந்தினால், மந்த்ர ஜலத்தை வீணாக்கிய பாபத்திற்கு ஆளாவோம். அன்றியும் ஜலத்திலேயே வித்யுத் சக்தி இருக்கின்றது. அது மந்த்ர பலத்தால் பன்மடங்கு அதிகமாகிறது. அதை நாம் ஏற்றுக் கொள்ளாமல் பாழாக்கி நஷ்டத்தையும் அடைவதாகும். மந்த்ர ஜலத்தை நிறுத்தி வாக்யம் முடிந்தவுடன் ப்ரோக்ஷித்துக் கொண்டால் ப்ரும்மஹத்தி பாப மகலும். வாக்கு, மநஸ், உடல், ரஜஸ், தமஸ், ஜாக்ரத், ஸ்வப்நம், ஸுஷுப்தி முதலியவைகளால் உண்டாகும் பாப மும் அகலும். "அப ஏவ ஸஸர்ஜாதௌ" ஜலத் தையே முதலில் பரமாத்மா ஸ்ருஷ்டித்தார். அது ப்ராணனை வ்ருத்தி செய்யும் ஸத்தும் உள்ளது.

ஜலம் ஸர்வதேவ வடிவமானது, ப்ராண ரூப மானது, மருந்தானது என வேத வாக்யங்கள் உத்கோஷிக்கின்றன. அந்த மந்த்ர அர்த்தங்களை நினைத்துக் கொண்டே ப்ரோக்ஷித்துக் கொண்டால் ஸகல பாபமுமகலும். ஸர்வ க்ஷேமமும் உண்டா கும். ஒவ்வொரு மந்த்ரத்திற்கும், ரிஷி, சந்தஸ், தேவதைகளைக் கூறி மந்த்ர அர்த்தத்தை உணர்ந்து த்யாநம் செய்து விதி வழுவாமல் கர்மா செய்தால்தான் அதன் பூர்ண பயனைப் பெறலாம். அர்க்யப்ரதானம், ப்ரும்மோபாஸனம் என்ற முக்ய கர்மாவைச் செய்ய நமது உடலை இந்த மார்ஜனம் சுத்தி செய்கிறது. நதி குளம் முதலிய வெளி ஜலத்தில் இதைச் செய்தால், இடது கையால் ஜலத்தைத் தொட்டுக்கொண்டு வலது கையால் ப்ரோக்ஷித்துக் கொள்ளவேண்டும்.

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

## மந்த்ர ஆசமனம்

உள்ளே உள்ள பாபம் அகல "ஸூர்யஶ்ச, ஆப:புநந்து, அக்னிஶ்ச," என்ற மூன்று மந்த்ர ங்களைக் கூறி முறையே, மூன்று வேளைகளிலும் ஜலத்தை அருந்தவேண்டும். இங்கு ஸூர்யன், ஜலம் அக்னி முதலிய தேவதைகளும், கோபம் கோபத் திற்கு அபிமான தேவதைகளும் நமது கரசரணங் களாலும், முக்கரணங்களாலும் செய்த பாபத்தை அகற்றி நம்மைச் சுத்தமாகும்படி கோருகிறோம். ஒவ்வொரு நாளும், இந்த அவயவங்களால் தெரிந் தும், தெரியாமலும் பல பாபங்கள் செய்ய நேரிடு கிறது. இது பாபம் என்று தெரியாமலே சில பாபங்களைச் செய்கிறோம். அத்தகைய பாபங்கள் நம் மனதைக் கெடுத்துப் பகவானை த்யானம் செய்யவோ முக்தி பெறவோ முடியாதபடி தடுக் கின்றன. அதோடும் பாபங்கள்தான் துன்பத்தைத் தரக் காரணமாகும். அதை அனுபவிக்கப் பிறவி யைத் தருவதும் கர்மாவே. ஆதலால் அன்றன்று அந்தந்த வேளைகளில் செய்த பாபம் குவியாதபடி அகற்றி மற்றொரு ஜன்மா இல்லாதபடி செய்ய லாம். பிறவி ஏற்படினும் துன்பமில்லாத நற் பிறவி பெறலாம்.

## மறுபடி மார்ஜனம்

முதல் மார்ஜன மந்த்ரத்துடன் (தலையில் ஜலத்தை ப்ரோக்ஷித்துக் கொள்ளல்) ததிக்ரா விண்ண என்ற மந்த்ரத்தையும் கூறி மறுபடியும் தலையில் ஜலத்தை ப்ரோக்ஷித்துக் கொள்ளவேண் டும். ததிக்ராவா என்ற தேவதையை ஸ்துதி செய்கிறோம். அது நமது முகத்தை வாஸனையுள்ள தாகச் செய்யட்டும். ஆயுளையும் வ்ருத்தி செய்யட்

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

டும் என்று இத்துடன் ஆபோஹிஷ்டா என்ற மந்த்ரத்தையும் கூறி முன்போல் ப்ரோக்ஷித்துக் கொள்ளவேண்டும். ஆந்த்ரர் ஹிரண்ய: வர்ணு என்று இன்னும் 4 மந்த்ரங்களையும் கூறி ப்ரோக்ஷித்துக் கொள்வர்.

### முகர்ந்து விடல்

"த்ருபதாதிவ முஞ்சது" என்று கூறி ஜலத்தை முகர்ந்து விடவேண்டும். தொழுக்கட்டையிலிருந்து மனிதன் விடுபடுவது போல் இந்த தீர்த்தம் என்னைப் பாபத்திலிருந்து விடுவிக்கட்டும் என்று மறுபடியும் பாபம் நம்மிடம் வராதபடி விலக்குகிறோம். இதைத் சிலர் அநுஷ்டிப்பதில்லை. அநுஷ்டித்தால் விசேஷமே.

### அர்க்ய ப்ரதானம்

இது ஒரு முக்யமான கர்மா. ஸந்த்யாவந்தனத்தின் ஜீவநாடி போன்றது. இதைச் செய்வதற்காகவே இவ்வளவு பூர்வாங்கமும் செய்து நம் உடல் மொழி மனஸ்களைச் சுத்தமாக்கிக் கொண்டோம். அர்க்ய ப்ரதானத்திற்காகச் சிலர் ப்ராணுயாமம் செய்து ஸங்கல்பம் செய்வர். முதலில் செய்த ஸந்த்யாவந்தன ஸங்கல்பமே போதுமென்பர் சிலர். தனி ஸங்கல்பம் செய்வதே ஸரியானது. ஆனல் அவரவர் செய்து வந்ததை விடலாகாது. ப்ரணவத்துடன் கூடிய காயத்ரியே அர்க்யம் விட 3 வேளைக்கும் மந்த்ரம். சிலருக்குக் கொஞ்சம் மாறுதல் உண்டு. காலை, மாலைகளில் 3, 3. ஸரியான காலத்தில் செய்யாததற்காக ப்ராயச்சித்தமாக ஒன்று. ஆக 4. பகலில், ஒரே அர்க்யம். ப்ராயச்சித்தமாக ஒன்று. ஆக 2. சிலர் பகலில் முதலில் 2 அர்க்யமளித்து ப்ராயச்சித்த அர்க்யம்,

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

ஒன்று அளிப்பர். இப்படிச் சில முனிவர் சொல்வதால், இந்த ஸம்ப்ரதாயத்தைச் செய்பவர் அங்ஙனமே அனுஷ்டிக்கவேண்டும்.

காலையில் நின்று கொண்டு பசுவின் கொம்பு உயரம் தூக்கி கிழக்கு முகமாக குதிகாலைச் சிறிது தூக்கி அர்க்யம் தரவேண்டும். கட்டவிரல் மற்ற விரல்களுடன் சேர்ந்திருந்தால் அது ராக்ஷஸர்களுக்கே ஆனந்தமளிக்கும். ஆதலால் கட்டவிரலை விலக்கியே அர்க்யம் இரண்டு கைகளாலும் அளிக்க வேண்டும். பகலிலும் நின்று கொண்டே அர்க்யம் தரவேண்டும். மாலையில் உட்கார்ந்து கொண்டு தரவேண்டும். காலை, பகல் வேளைகளில் நதி அல்லது தடாகமானல் ஜலத்திலும், மற்ற இடமானல் சுத்த ஸ்தலத்திலும், மாலையில் கரை மீது அல்லது ஜலத்திலும் அர்க்யமளிக்க வேண்டும். வீட்டில், பாத்ரத்தை வைத்துக்கொண்டு ஸந்த்யா வந்தனம் செய்யும் போதும் இடது கை கட்டை விரல் ஆள்காட்டி விரல் இரண்டிற்கும் நடுவில் பாத்ரத்தை வைத்துக் கொண்டு இருகைகளாலும் அர்க்யம் தரவேண்டும். ஒரு கையால் அளிப்பதும் நமஸ்காரம் செய்வதும் தேவதைகளை அவமானம் செய்வது போலாகும். பாபம்.

## வேதக் கதை

முன் ஒரு ஸமயம் சில ராக்ஷஸர்கள் ப்ரும்மாவை நாடி உக்ரமாகத் தவம் செய்தனர். அவர் என்னவரம் வேண்டும் என்று கேட்க ஆதித்யனேடு நாங்கள் சண்டையிடவேண்டும் என்றனர். ப்ரும்மா அப்படியே ஆகட்டும் என வரந்தந்தார். ஆதலால் அந்த அஸுரர்கள் காலையிலும் மாலையிலும் ஸூர்யனை எதிர்த்துச் சண்டையிடுகின்றனர்.

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

அச்சமயம் ஸாதுக்கள் காயத்ரியைக் கூறி அர்க்ய மளித்தால் அந்த ஜலம் வஜ்ரமாகி அந்த அரக் கர்களை மந்தே ஹாருணமென்ற த்வீபத்தில் தூக்கி எறிகின்றதாம். அவர்களை எறிந்த பாபமானது அர்க்யம் ஆனபின் செய்கின்ற ப்ரதக்ஷிணத்தால் அகலும். இதை உணர்ந்து இரு ஸந்த்யைகளிலும் ஸூர்யனை த்யானம் செய்து ஸந்த்யையைச் செய் கிறவன் ஸகல நன்மைகளையும் பெறுவான்.

இந்த அர்க்யங்களைப் பக்தி ஶ்ரத்தையுடன் கொடுப்பதுடன் காலத்தில் அளிப்பதே மிக ஶ்லாக் யம். "காணுமல், கோணுமல், கண்டு கொடு" என ஸித்தர் கூறிய காலமே முக்ய காலமாம். தர்ம சாஸ்த்ரம் கூறியபடி ஸந்த்யாதி வைதிக கர்மாவை முற்பிறவியிலோ இப்பிறவியிலோ செய்து பயனைப் பெற்றவர் ஸித்தர். முக்தர்களான ஸித்தர்கள் கூட ஸந்த்யா உபாஸனையையும், அதிலும் அர்க்யத் திற்கேற்ற காலத்தையுங் குறிப்பது கவனிக்கத் தக்கது. அரக்கர் ஆதித்யனுடன் போருக்கு வரும் ஸமயம், காலையில் பாலஸூர்யன். மாலையில் வ்ருத்த ஸூர்யன். அச்சமயம் பகைவரை வெல்ல நாம் அர்க்யம் எனும் வஜ்ராயுதத்தைப் பயன்படுத்தி ஞல் எவ்வளவு உபகாரமாக இருக்கும்? எப்படி யோ போரில் பகைவரிடமிருந்து விடுபட்டு வந்த பின் அவருக்கு நாம் செய்யும் உதவி பயனற்ற தல்லவா? ஆதலால் இந்த பாவனையுடன் காலத்தில் அர்க்யம் அளிக்கவேண்டும். காலையில் கிழக்கு திக்கிலும், பகலில் வடக்கிலும், மாலையில் மேற்கிலும் அர்க்யம் அளிக்க வேண்டும். "அன்ய த்வீபங் களில் எவரும் அர்க்யம் அளிப்பதில்லையே! அங்கு ஸூர்யன் உதயமாக வில்லையா?" எனக் கேட்க லாகாது. அங்கு ஸூர்ய உதயமும் ப்ரகாசமும்

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

இங்கு உள்ளதுபோல் 30 நாழிகையும் இல்லை. ஸூர்ய ரஶ்மி அங்கு குறைவு. ஆதலால்தான் நிழலில் வளரும் செடிபோல் வெளுத்திருக்கின்றனர். சரீர போஷணத்திற்கு வேண்டியதை இயற்கை மூலமாக இல்லாமல் செயற்கை மூலமாகப் பெறுகின்றனர். அது கர்ம பூமியல்ல, புண்ய பூமியும் அல்ல! தெய்விக உணர்ச்சியுமில்லை! அல்லும் பகலும் அறுபது நாழிகையும் தெய்வத் தொண்டில் ஈடுபடாமல் உடலையே வளர்ப்பர். ஸூர்யன் நமது உதவியைக்கொண்டு ஜீவிப்பவரல்லர். வேறெவர் உதவியும் ஸூர்ய ஜ்யோதிஸ்ஸிற்கு அவஶ்யமில்லை. எனிலும், 88 ஆயிரம் மஹரிஷிகள் வேளை தவறாமல் அர்க்யம் அளிக்கின்றனர். அர்க்யமளிப்பதும், மற்ற கர்மாவும் நம் நன்மைக்காகவே ஏற்பட்டவை. அர்க்யமளிப்பதால் நாம் நோயற்ற வாழ்வு வாழ்ந்து குறைவற்ற செல்வத்தைப் பெறுகிறோம். பகலில் பாநு பலவானாக இருப்பதால் ஒரு அர்க்யம் போதும். வேதம் மத விஷயத்தில் மிகக் குழந்தைகளான நமக்கு ஊக்கமுண்டாவதற்காக இப்படிச் சித்தரித்துக் கதை கூறிற்று.

உரிய காலத்தில் அர்க்யம் அளிப்பவர் கூட (காலத்தைக் கடந்ததற்காகச் செய்யப்படும்) ப்ராயச்சித்த அர்க்யம் அளிக்கவேண்டுமா? என ஸந்தேஹிக்கக் கூடாது. அளிக்கத்தான் வேண்டும். காலம் இது ஸரியானதா? அல்லவா? என எப்போதும் நம்மால் நிர்ணயிக்க முடியாது. மேகத்தால் நமக்கு ஸூர்யன் தெரியாதபோது என் செய்வது? ப்ராயச்சித்த அர்க்யம் கொடாவிடில் தோஷம் தோன்றும். ஸரியான காலத்தில் ஸந்த்யை செய்தவர் ப்ராயச் சித்தார்க்யம் அளித்தால் அது

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

பயனற்றதாகி விடும் என்பதைத் தவிர அதனல் யாதொரு நஷ்டமுமில்லே. அது ஒரு ஸத்வாஸனையை (பழக்கத்தை) உண்டு பண்ணுவதால் முன்னோர் செய்துவந்தபடி செய்து வரவேண்டும். அரக்கரை வதம் செய்த பாபம் அகல இந்த அர்க்யமென்பர் சிலர். அஸுரர் தமோகுணம் உள்ளவர். நமது பாபமும், அசுத்தமும், நோயும், அசுத்தமான அந்தக்கரண வ்ருத்தியுமே அரக்கர்கள். நமக்குச் சுறுசுறுப்பை, ஆரோக்யத்தை, ஜீவ சக்தியை, ஒளியை, அறிவைத் தரும் ஸூர்ய கிரணங்களின் அருள் நம்மிடம் வராமல் அவை தடுக்கின்றன. அச்சமயம் நாம் எழுந்து ஸ்நாநம் செய்து சுத்தனுகச் சுறு சுறுப்பாகக் கர்மா செய்தால் நம்மிடமுள்ள அஸுர அம்சம் அகன்று தெய்வாம்சம் உண்டாகும் என்பதே இக்கதையின் கருத்து.

அடுத்தபடி ப்ரணவத்துடன் வ்யாஹ்ருதியைக் கூறி தன்னைச் சுற்றி பரிஷேசநம் போல் ஜலத்தால் சுற்றவேண்டும். இதை உட்கார்ந்தபடியே செய்யக்கூடாது. எழுந்து தன் உடலால் ஒரு ப்ரதக்ஷிணமாகச் சுற்றி இரு கரங்களாலும் மார்பைத் தொடவேண்டும். பிறகு உட்கார்ந்து ஒரு ப்ராணுயாமம் செய்து உள்ளிருக்கும் பாபத்தை அகற்றி ஸந்த்யையில் முக்யமானதில் இரண்டாவதான உபாஸனையைச் செய்யவேண்டும். "எதிரில் காணப்படும் ஆதித்யன் ப்ரும்ம ஸ்வரூபி. அந்த ப்ரும்மமாக நானிருக்கிறேன். ப்ரும்மமே ஸத்யம்" என்று கூறி நன்கு மனதினல் த்யானம் செய்யவேண்டும். இது ஓர் சிறந்த உபாஸனே. வேதாந்தத்தின் ஸாரமானது. ஸகல வேத சாஸ்த்ரங்களாலும் வர்ணிக்கப்படும் தத்வம் இதே. முக்திக்கான வழியும் இதே. ஸூர்ய மண்டலத்தின்



CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

இடையிலிருந்து ஸூர்யனையும் நம்மையும் ஆட்டி வைக்கும் பரமாத்ம ஸ்வரூபத்தையே இங்கு உபாஸிக்கிறோம். இப்படி தினந்தோறும் மூன்று வேளையும் சிறிது நேரம் அப்யாஸம் செய்து வந்தால் அதுவே நம்மை ப்ரும்ம நிஷ்டையில் அமர்த்தும். இதன் தத்வத்தை அறிந்து விதி வழுவாமல் செய்பவருக்கு இப்பிறவியிலேயே ஸதாசார்யன் கிட்டுவார். வேதாந்த உபதேசம் பெறலாம். க்ஞானமும், நிஷ்டையும், முக்தியும் கைகூடும். இதற்காகவே உடலெடுத்தோம். இதை அனுஷ்டித்து அனுபவித்து முன்னோர் அன்புடன் இந்த அம்ருதத்தை நமக்கு நமது பாக்யத்தினல் அளித்திருக்கின்றனர். இதை அனுஷ்டிக்காவிடில் கண்கள் இருந்தும் குருடர் ஆவோம். உணவிருந்தும், உண்ண கரமும், வாயுமிருந்தும் உண்ணக்கொடுத்து வைக்காத பாபியாவோம்.

## ஆதித்யாதி தர்ப்பணம்

பிறகு, உட்கார்ந்து கொண்டு 3 வேளைகளிலும் கிழக்கில் அல்லது வடக்கு திக்கில் ஆதித்யன் முதலிய நவக்ரஹங்களுக்கும் கேசவன் முதலிய பன்னிரண்டு நாமாக்களுடன் கூடிய மஹாவிஷ்ணுவிற்கும் இரு கரங்களாலும் அர்க்யம் அளிக்க வேண்டும். இது ஸந்த்யையின் உத்தர அங்கமாகும். ப்ரதான கர்மாவினல் பரமாத்மாவை உபாஸித்தோம். அது அரசனை ஆராதிப்பது போலாம். அந்த பரமாத்மா எந்த ஸகுணமான ரூபத்தின் மூலமாக இவ்வுலகை நடத்துகிறாரோ, அப்படிப்பட்ட நவக்ரஹங்களுக்கும் விஷ்ணுவுக்கும் ஜல தர்ப்பணம் மூலம் உபாஸனை செய்கிறோம். அரசனுக்கு அடங்கியவரே அவரது பரிவாரம். அரசனை

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

அர்ச்சித்தாலே போதுமென்றாலும் நேராக நம்மை ஆளும் பரிவாரத்தைச் ஸந்தோஷப் படுத்துவதும் மிக அவஶ்யம். பரிவார தேவதைகள் மனமிருந்தால் முக்ய தேவருடைய ப்ரஸாதம் விரைவில் நமக்கு கிடைக்கும். அந்த பரிவார தேவதையாக இருப்பவரும் பரமனே. அவர்களை ஆராதிப்பதும், வேறு வழியாக அவரையே ஆராதிப்பதாகும். ஆதலின் அதுவும் மிக முக்யமே. நம்மில் சிலர் இதைச் செய்வதில்லை. பிறகு ஆசமநம் செய்து ஸந்த்யா கர்மாவின் முன் பாதியைப் பூர்த்தி செய்கிறோம்.

இதை "ஸந்த்யை" என்றும், பாலா மந்த்ரத்துடன் சில பீஜாக்ஷரங்களைச் சேர்த்து ஜபிப்பதும் அதற்கு ரிஷி சந்தஸ் தேவதை அங்கந்யாஸம், கரந்யாஸம், த்யாநம், பஞ்ச பூஜை முதலியவைகளைச் செய்து முன் கூறிய மூல மந்த்ரம் ஜபம் செய்வதும் "வந்தன" மென்றும் இதையும் செய்தால் தான் ஸந்த்யாவந்தனம் பூர்த்தியாகும் என்றும் சில ஸம்ப்ரதாயம் உண்டு. ப்ரும்ம உபதேசம் செய்து ஸந்த்யா வந்தனத்தை ஆரம்பிக்கும்போது பலர் இதை உபதேசமாகப் பெறுவதில்லை. ஸந்த்யையை நன்கு செய்து, ஶ்ரத்தை இருந்தால் தக்க குருவின் மூலம் வந்தன மந்த்ர உபதேசம் பெற்று செய்தால் விசேஷமே. (யஜுர்வேதிகளே ஆனாலும் சக்தி தீக்ஷை பெற்றவர், சிவ தீக்ஷை பெற்றவர் ஆகிய சிலர் நாம் செய்யும் ஸந்த்யையைச் சிறிது மாறுதலுடன் அதிகப்படி மந்த்ரங்களைச் சேர்த்து விசேஷமாகச் செய்வர்.)

## ஜபமும் ஏற்ற இடமும்

"ஜ" என்ற எழுத்து ஜன்மாவையும், "ப" என்ற எழுத்து பாபத்தையும் குறிக்கும். ஜன்மா

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

வையும் ஜன்மாவிற்குக் காரணமான பாபத்தையும் அகற்றுவதால் “ஜபம்” என்று கூறப்படுகிறது. எதை விட்டாலும் இந்த ஜபத்தை விடாதே என தர்ம நூல்கள் வற்புறுத்துகின்றன. பல வகையான யாகங்களில் ஜப யாகமே சிறந்தது என பகவத் கீதையில் பரமாத்மா கூறுகிறார். ஒரு முறையுடன் ஒன்றைக் கூறி நிறுத்தாமல் பல முறை கூறுவதே ஜபம் எனப்படும். ஜபிக்கத்தக்க மந்த்ரங்கள் பல உள. சிலது மிக மிகச் சுருக்கமாகவும் சிலது பெரிதாகவும் இருக்கும். ஒவ்வொரு தேவதைக்கும் ஒரு மந்த்ரமுண்டு. ஏழுகோடி மந்த்ரங்கள் இருப்பதாகப் புராணங்கள் கூறுகின்றன. பரமசிவத்தை பற்றி ப்ரஸித்தமானது பஞ்சாக்ஷரீ. மஹாவிஷ்ணுவைப் பற்றியது அஷ்டாக்ஷரீ. தேவியைப் பற்றிய பலவற்றில் பஞ்ச தசாக்ஷரீ மிக ப்ரஸித்தமானது. அதே போல் பரமாத்மாவைப் பற்றிய மஹா மந்த்ரமே காயத்ரியாம். மந்த்ரத்தின் பொருளை மனதால் நினைத்து வாயினுல் பலமுறை அவைகளை ஜபிக்க வேண்டும். ஜபம் செய்யும் பொழுது ஒவ்வொரு நாம ஜபம் இன்னொரு நாமாவுடன் சங்கிலி போல் சேர்ந்து அந்தந்த தேவைகளின் திருவடியில் நம்மைக் கொண்டு சேர்க்கின்றது. ஜபத்தால் அந்தந்த தேவதையின் உருவம் நமக்கருகில் படைக்கப் படுகிறது. ஒரு அக்ஷரத்திற்கு ஒரு லக்ஷமாக எவ்வளவு அக்ஷரமுண்டோ ஒரு மந்த்ரத்தில் அவ்வளவு ஜபம் செய்து அதற்குக் கூறியபடி தர்ப்பணம் ஹோமம், அன்ன தானம் செய்தால் அந்தந்த தேவதை நம் எதிரில் ப்ரத்யக்ஷமாகத் தோன்றும். இதே புரஸ்சரணை எனப்படும். (காயத்ரீ புரஸ்சரணை பற்றியதைக் காயத்ரீ ஜபம், மஹிமை என்ற தலைப்பின் கீழ் காண்க.)

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

நமது வீட்டில் காயத்ரி ஜபம் செய்வதானல் ஔபாஸநம் அக்நிஹோத்ரம் உள்ள இடம், அல்லது தேவபூஜை உள்ள இடம் அல்லது துளஸீ மடம், அல்லது பசு கட்டுமிடம் இவைகளின் அருகே உட்கார்ந்து ஜபம் செய்தால் பன்மடங்கு அதிக பயனைத்தரும். வெளிகளில் செய்வதானல் ஜலக்கரை, தேவாலயம், பகலில் அச்வத்த ஸமீபம் அல்லது சந்த்ர ஸூர்யர்களது எதிரில் இருந்து ஜபம் செய்யலாம். வீட்டில் செய்வதைவிட நதி தீரம் இரண்டு பங்கும், பசு சாலை 10 பங்கும், அக்நி சாலை 100 பங்கும், புண்யமான க்ஷேத்ரம் 1000 மடங்கும், தேவாலயம் கோடி மடங்கும் அதிக பலனைத் தரும். ஸந்த்யை செய்த இடத்தை விட்டு 40 அடிக்கு மேல் ஜபம் செய்ய வேறிடம் போகக்கூடாது. "ஆப்ரும்ம" என்ற ஶ்லோகத்தைக் கூறி ஸமஸ்த ப்ராம்மணர்களுக்கும் நமஸ்காரம் செய்து "அப ஸர்பந்து" என்ற ஶ்லோகத்தைக் கூறி ஜப ஸ்தலத்திலுள்ள பூதங்களை அகற்றி ஜபத்திற்கு உட்காரவேண்டும். ப்ரோக்ஷித்து ஆஸனத்தில் அமர்ந்து ஜபம் செய்ய வேண்டும். எதிரில் தீர்த்தபாத்ரம் இருக்கவேண்டும். இவை நமது ஜபத்தின் பயனை மற்றவை கொண்டு போகா வண்ணம் ரக்ஷிப்பதற்காகவாம்.

## ஆஸனம்

எதன்மீது நாம் உட்காருகிறோமோ அது ஒரு வகை ஆஸனமாம். கால்களை விதி கூறிய வண்ணம் ஒரு வகையாக அமைத்து உட்காருவது மற்ெரு வகையான ஆஸனம். இரண்டும் முக்யமே. ஆஸனமில்லா பூமியில் உட்கார்ந்து ஜபம் செய்தால் அந்த ஜபத்தின் பலன் நம்மை விட்டு வெளியில்

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

செல்லும். அதற்காக மரப்பலகை (இரும்பு ஆணி இல்லாததே நல்லது) தர்பாஸனம், தோல் ஆஸனம், கம்பளாஸனம், வஸ்த்ர ஆஸனம் இவைகளில் ஒன்றின் மீது அமர்ந்து ஜபம் செய்யவேண்டும். தோலில் மான்தோல் மிக ஶ்லாக்யமே. ஆனால் யாகத்தில் க்ருஷ்ணாஜின தீக்ஷை செய்துகொள் ளாத க்ருஹஸ்தன் மான் தோல்மீது உட்காரக் கூடாது. ப்ரும்மசாரியும், ஸன்யாஸியும் அதன் மீது அமர்ந்து ஜபிக்கலாம். புலித்தோல் சிறுத்தைத் தோல் முதலியவைகளை எல்லோரும் உபயோகிக்க லாம். எந்த ஆஸனமாயிருந்தாலும் அதன் மீது வஸ்த்ரத்தை ஆஸனமாக அமைத்துக் கொள்வது பல வகையிலும் நல்லது. இதைத் தழுவியே 'சைல அஜின குஶ,' என்று ஸ்ரீ பகவத் கீதை கூறிற்று. முதலில் தர்ப்பம், பிறகு அஜினம், அதன்மீதுவஸ்த் ரம் என அமைத்துக் கொண்டால், தர்பாஸனம் உறுத்தாது. அஜினத்தால் உண்டாகும் உஷ்ணம் பீடிக்காது. வஸ்த்ர ஆஸனத்தை எப்போதும் உபயோகிக்கலாம். மலையாளத்தில் உள்ள கூர்மம் போன்ற பலகை ஆஸனம் சிறந்தது.

பத்மாஸனம், ஸ்வஸ்திக ஆஸனம் முதலிய பல ஆஸனங்கள் யோக சாஸ்த்ரத்தில் வர்ணிக்கப் படுகின்றன. இரு பாதங்களையும் இரு முழங்கால் துடைகளுக்கிடையே வைத்து ஸாதாரணமாக எப்போதும் நாம் உட்காருவது போல அமர்வதே ஸ்வஸ்திக ஆஸனம் எனப்படும். இதே பெரியோர் களால் கைகொள்ளப்பட்டது. ஶ்ரம மில்லாதது. பழக்க மில்லாதவர் கூட அதிக நேரம் உட்காரக் கூடியது.

முதற் கூறிய தர்ப்பாதி ஆஸனங்களைப் போடு முன் "ப்ருத்வி த்வயா" என்ற ஶ்லோகத்தைக்

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

கூறுவதுண்டு. "ஓ பூமியே நீ உலகைத் தரிக்கிறாய். உன்னை விஷ்ணு தரிக்கிறார். நீ என்னைத் தரித்து ஆஸனத்தைச் சுத்தமாகச் செய்" என அதன் கருத்து.

## ஜப ஸங்கல்பமும் ப்ராணயாமமும்

"சுக்லாம் பரதரம்" குட்டிக்கொண்டு ப்ராண யாமம் செய்து அந்தந்த காலத்தைக் கூறி காயத்ரி ஜபம் செய்கிறேன் என்று ஸங்கல்பம் செய்ய வேண்டும். இதில் ஜபமே மிக முக்யமானது. அதற்குப் பூர்வ அங்கமாக ப்ராணயாமத்திற்கு ரிஷி, சந்தஸ், தேவதைகளைக் கூறி 10 ப்ராணயா மமும் செய்து, காயத்ரி ஆவாஹந மந்த்ரம் கூற வேண்டும். ஆவாஹநத்திற்கு ரிஷி, சந்தஸ் தேவதைகளைக் கூறி அதை முடித்துப் பின்னர், காயத்ரிக்கு ரிஷி, சந்தஸ், தேவதை (அங்கன்யாஸ கரன்யாஸம், த்யாந ச்லோகம் இவை பலருக்கு இராது) கூறுவது பூர்வ அங்கமாகும்.

பிறகு செய்யும் ஒரு ப்ராணயாமம், காயத்ரீ விஸர்ஜந மந்த்ரம், உபஸ்தாநம் (உபஸ்தாநத்தைச் சிலர் ஜபம்போல் முக்ய கர்மா என்பர்), திக்தேவ தைகளை நமஸ்கரித்துச் சில சுலோகங்களைக் கூறி முடிவில் நமஸ்கரிப்பது உத்தர அங்கமாகும்.

ப்ராணயாமத்தில் ப்ரணவம், 7 வ்யாஹ்ருதி கள், காயத்ரீ, காயத்ரீ சிரஸ் என்ற 4 மந்த்ரங்கள் இருக்கின்றன. ஆதலால் நான்கு முறை ரிஷி, சந்தஸ், தேவதைகளைக் கூறுகிறோம். 7 வ்யாஹ் ருதிகளுக்கும், தனித்தனி, ரிஷி, சந்தஸ், தேவ தைகள் கூறவேண்டும். அப்படிச் செய்வதானல் 10 முறை ரிஷி, சந்தஸ் தேவதைகள் கூறவேண் டும். அதற்காக மஹர்ஷிகள், பூராதி, ஸப்த

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

வ்யாஹ்ருதிகளுக்கும் என்று ஒரு வழியாக அத்ரி முதலிய ரிஷிகளையும், காயத்ரீ முதலிய சந்தஸ்களை யும், அக்நி முதலிய தேவதைகளையும் சேர்த்துக் கூறினர். ப்ராணயாமத்தைப் பற்றி முதலில் கூறினோம். அங்ஙனம் பூரக, கும்பக, ரேசக என்ற 3 ப்ராணயாமங்களை ஒன்ருகக் கருதி 3 ப்ராணயாமங்களைச் செய்யவேண்டும். அங்ஙனம் செய்ய அப்யாஸமில்லாதவர் அல்லது சக்தி இல்லா தவர், ஒரு ப்ராணயாம மந்த்ரம் முடியும்வரை மூச்சை அடக்கி இப்படி 10 ப்ராணயாமம் செய்ய வேண்டும்.

## காயத்ரியின் ஆவாஹன மந்த்ரம்

காயத்ரீ மந்த்ரம் வேத ஸாரமானதால் வேதமே அதை ஆவாஹநம் செய்ய ஒரு மந்த்ரத் தைக் கூறுகிறது. அதற்கு ரிஷி சந்தஸ் தேவதை கூறி "ஆயாது" என்ற மந்த்ரத்தை ஜபிக்கவேண் டும். பஞ்சாக்ஷரீ என்ற மந்த்ரம் வேதத்திலுள்ள ஸ்ரீ ருத்ரத்தில் கூறப்படுகிறது. ஆனாலும் அதற்கு இதுபோல் ஆவாஹன மந்த்ரம் வேதத்திலில்லை. இது ஒன்றே, காயத்ரீ மந்த்ரங்களில் மிகச் சிறந் தது என்று காட்டப் போதிய ப்ரமாணமாம்.

இந்த மந்த்ரம் பற்றி வேதம் ஒரு கதை கூறு கிறது:—ஒரு ஸமயம் தேவர்களும் அரக்கர்களும் போர் புரிந்தனர். அச்சமயம் இவர்கள் இருவர் களது பொருளும் ரக்ஷிப்பாரின்றி வீணயிற்று. அதைக் கண்டு காயத்ரீ தேவதை அப்பொருளை ஜாக்ரதையாக எடுத்து ரக்ஷித்து வந்தது. போர் முடிந்த பின் அஸுரர் முறையின்றி மரியாதையு மின்றி காயத்ரியை மிறட்டி விறட்டி பொருளைப் பிடுங்க முயன்றனர். அதைப் பெற அரக்கரால்

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

முடியவில்லை. அமரரோ காயத்ரியைப் பணிந்து மிக மரியாதையுடன் "ஆயாது" எனும் மந்த்ரத் தால் துதித்தனர். அது அவர்களிடம் ஸொத்தை யும் அளித்து, அருளும் புரிந்தது. அதன் பொருள், "ஓ காயத்ரியே! நீ வேதங்களுக்கெல்லாம் தாய். வரத்தை அளிப்பவள்! அழிவற்றவள்! ப்ரும்ம ஸ்வ ரூபிணீ. நீ எங்களிடம் வா. எங்களிடம் இரு. நீ ஓஜஸ், ஸஹன சக்தி, பலம், தேஜஸ், தேவர்களுக்கு வீடு எல்லாம் நீயே, ஆயுஸ் நீயே" என்பதாம். இதி லிருந்து காயத்ரீயின் மஹிமையும் பெருமையும் நன்கு புலப்படுகின்றதல்லவா?

## காயத்ரீயின் மஹிமையும் பெருமையும்

"காயந்தம் த்ராயதே இதி காயத்ரீ." அதா வது அதை ஸ்வரத்துடன் உச்சரிப்பவரைக் காக் கின்றது என்பது பொருள். வேதத்தில் காயத்ரீ உஷ்ணிக் அநுஷ்டுப் ப்ருஹதீ பங்க்தீ, த்ருஷ்டுப் ஜகதீ முதலிய சந்தஸ்கள் பல கூறப்படுகின்றன. காவ்யங்களிலும், அநுஷ்ட்டுப், ஆர்யா, இந்த்ர வஜ்ரா, வஸந்த திலக முதலிய பற்பல சந்தஸ்கள் (வ்ருத்தம்) உள. இத்தனை எழுத்துக்கள் உள்ளது, இத்தனை மாத்ரைகள் உள்ளது, என்பது போன்ற லக்ஷணம் உள்ளவை சந்தஸ்ஸுகள். வேதத்தின் ஆறு அங்கத்தில் ஒன்றான சந்தஸ் என்ற அங்கம் இது பற்றி விரிவாகக் கூறுகிறது. அத்தகைய சந்தஸ்ஸுகளில் காயத்ரீ என்பது ஒரு சந்தஸ் ஆகும். அது ஆதியில் ஒரு பாதத்திற்கு 4 அக்ஷர முள்ளதாக இருந்தது. பின்னர் 8 அக்ஷரமுள்ள தாக ஆயிற்று. 3 பாதமும் 24 எழுத்தும் அமையப் பெற்றது இது, என வேதம் இதை ஒரு கதை மூல மாக விளங்குகிறது.

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

(க்ருஷ்ண யஜுர்வேதம் ஆறும் காண்டம் முதல் ப்ரச்நம் ஆருவது அநுவாகம்) கத்ரூ ஸுபர்ணீ என்ற இரு ஸஹோதரிகளும் அழகிற் சிறந்தவர் யார் என விவாதம் செய்தனர். இதில் ஜயித்தவர்க்குத் தோற்றவர் அடிமை ஆவது என்று முடிவு கட்டினர். கத்ரூ ஜயித்து ஸுபர்ணீ என்பவளை அடிமையாக்கிக் கொண்டாள். மூன்ரு வது உலகிலுள்ள ஸோமலதையைக் கொண்டு வந்து கொடுத்தால் நீ அடிமையிலிருந்து விடுபடு வாய் என்ருள் கத்ரூ. ஸுபர்ணு என்பவளுக்கு சந்தஸ் வடிவமான சில புத்ரர்கள் உண்டு. அவர் களைப் பார்த்துத் தாய் கூறினள்:—

"ஓ புத்ரர்களே! நீங்கள் பெற்ருேரைப் பின் னர் ரக்ஷிப்பீர்கள் என்பதற்காகவே இளமையில் பெற்ருேர் உங்களை ரக்ஷிப்பது. ஆதலால் நீங்கள் மூன்ருவது உலகம் சென்று ஸோமலதையைக் கொண்டு வந்து தாயான என்னை அடிமையிலிருந்து விடுவிப்பீர்களாக" என்ருள். இதைக் கேட்டு 14 அக்ஷர வடிவமான ஜகதீ என்ற சந்தஸ் ஸோம் லதையைக் கொண்டுவர மேலே கிளம்பிற்று. அது ஸோமலதையைக் கொண்டு வராததுடன் தனது ஸ்வரூபத்தில் 2 அக்ஷரங்களை அங்கே இழந்து 12 அக்ஷரமுள்ளதாகத் திரும்பிற்று. 13 அக்ஷரவடிவ முள்ள த்ருஷ்டுப் என்ற சந்தஸ் மேலே கிளம்பிற்று. அதுவும் ஸோமலதையைக் கொண்டு வராமல் 2 அக்ஷரங்களை இழந்து 11 அக்ஷரத்துடன் திரும் பிற்று. பிறகு 4 அக்ஷரவடியமாயிருந்த காயத்ரீ சந்தஸ் கிளம்பிற்று. அங்கு சென்று காயத்ரீ ஸோமலதையைக் கொண்டு வந்தது. அத்துடன் தன் ஸஹோதரர்கள் இழந்த 4 அக்ஷரங்களையும் மீட்டு எட்டு அக்ஷரமுள்ளாகத் திரும்பிற்று. ஆத

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

லால் வயதில் உருவில் சின்னதாக இருந்தாலும் காயத்ரியே சிறந்தது, உயர்ந்தது, என ப்ரும்ம வாதிகள் கூறினர் என்பது வேத கதை. (இதே கதைபாம்புகளின் தாயான கத்ரூ, கருடன் தாயான ஸுபர்ணு என்பவளுடன், உச்சைச்ரவஸ் எனும் குதிரை விஷயமாக சண்டை இட்டாள். கருடன் அம்ருதத்தைக் கொண்டு வந்து தாயை விடுவித்தார் எனப் புராணங்கள் கூறுகின்றன, (இக்கதை காயத்ரீ 8 எழுத்துள்ள சந்தஸ் வடிவமானது, மற்ற வைகளைவிட மிகச் சிறந்தது என்ற தத்வத்தை விளக்குகின்றது. 3 பாதமும், பாதம் ஒன்றுக்கு 8 அக்ஷரமாக 24 அக்ஷரங்களும் உள்ள ஒரு மந்த்ரம் காயத்ரீ என அமைக்கப்பட்டிருக்கிறது.

காயத்ரீ என்ற சந்தஸ் வடிவமாக அமைந்த ஒரு அரிய மந்த்ர மிது. மந்த்ரத்திற்கு ஒலி வடிவம், அக்ஷரவடிவம், அதனுல் கூறப்படும் தேவதா வடிவம் என மூன்று வடிவம் உண்டு. செவியால் கேட்கத் தக்க ஒலியைக் கண்ணுல் காண அக்ஷரம் அமைந்திருப்பதுபோல், மந்த்ரத்தை உச்சரித்தவுடன், அந்த மந்த்ரத்தினுல் கூறப்படும் தெய்வத்தின் உருவம் தோன்றுகிறது. இதை நமது மீமாம்ஸா சாஸ்த்ரம் கூறுகிறது. விக்ஞான சாஸ்த்ரக்காரர் இது உண்மை என, இப்போதே கண்டறிகின்றனர். 24 என்ற காயத்ரி அக்ஷரத்தின் எண்ணிக்கைக்கே தனித்ததொரு மஹிமை உண்டு. இதைக் கொண்டே வால்மீகி ஸ்ரீ ராமாயணத்தை ஆயிரம் ஸ்லோகமாக அமைத்தார். த்யாக ப்ரும்மம் இரண்டாயிரத்து நானூறு கீர்த்தனைகளை இயற்றினுர். ஜயதேவர் 24 அஷ்டபதி அமைத்தார். ஒவ்வொரு அக்ஷரமும் மிக அத்புதமான சக்தி வாய்ந்தது. இவ்வக்ஷரங்களின் அரிய சேர்க்கையால் ஒப்புயர் வற்றது காயத்ரீ.

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

## காயத்ரியின் அர்த்தம்

பரப்ரும்மம் என்ற வஸ்துவை சிவன், விஷ்ணு, சக்தி, விநாயகன், முருகன், ஆதித்யன் என்று பற்பலவாறு அழைப்பதைப்போல், ப்ரும்மத்தை விளக்கக் கூடிய காயத்ரிக்குப் பல பொருள்கள் கூறப்படுகின்றன. அஜபா காயத்ரீ, காயத்ரீ, துரீய காயத்ரீ என்று 3 வகை காயத்ரீ உண்டு. ஹம் என்று கூறும்போது காற்று உள்ளே செல்கிறது. ஸ: என்றபோது வெளியில் செல்கிறது. இப்படி நாம் எவ்வளவு மூச்சு விடுகிறோமோ, அவ்வளவு முறை ஹம், ஸ:, என்ற காயத்ரீ நம் வாயால் ஜபிக்கப்படாமலே செய்யப்படுகிறது. இது அஜபா காயத்ரீ, ஹம்ஸ காயத்ரீ எனப்படும் (ஹம், ஸ, ஸோஹம் என்பது ஒருவகை). த்ரிபதா காயத்ரீ என்பதே மூன்று வேத ஸாரமான ஸந்த்யா வந்தனத்தில் ஜபிக்கப்படும் காயத்ரீ. இது மிக ஸுப்ரஸித்தமானதால் இதைப் போலவே தேவதைகளுக்கும், கணேச காயத்ரீ சிவ காயத்ரீ முதலிய 12 காயத்ரிகள் அமைந்துள. (தைத்ரீய அருணம் 10-1-4). துரீய காயத்ரி என்பது, காயத்ரியின் நான்காம் பாதம். அதை இந்த காயத்ரீ உபதேசம் பெற்று செய்து வருபவர் அவச்யமாக விரும்பினல் குருவினிடம் உபதேசம் பெற்று ரிஷி, சந்தஸ், தேவதைகள் அங்க, கர, ந்யாஸ, த்யானதிகளுடன் செய்வதால் விசேஷ பலன் உண்டு. அதுவும் வேத மந்த்ரமே. எந்த மந்த்ரத்தை ஜபித்தாலும் முதலில் காய்த்ரீ ஜபம் செய்து மற்றதை இந்த காயத்ரி ஜப கணக்கிற்குமேல் போகாமல் ஜபிக்கவேண்டும்.

இது வேத மத்த்ரமானதால் நம் புத்தியைக் கொண்டு பொருள் கூறமுடியாது. நிருக்தம் முதலிய

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

அங்கங்களை ஸஹாயமாகக் கொண்டு, ஸாயணு சார்யர், பட்ட பாஸ்கரர் முதலிய பாஷ்யக்காரர் களும், விச்வாமித்ரர், அகஸ்த்யர் போன்ற மஹ ரிஷிகளும், ஹரதத்தர், அப்பய்யதீக்ஷிதர் பொன்ற பக்தர்களும் ஒவ்வொரு வகையாக அர்த்தம் செய் கின்றனர். இதில் ப்ரணவம், வ்யாஹ்ருதி என்ற இரண்டும், காயத்ரியுடன் சேர்த்து ஜபிக்கவேண்டி யவைகள் என்றாலும், அவை காயத்ரியல்ல. ப்ரண வத்திலிருந்து வ்யாஹ்ருதி, வ்யாஹ்ருதியிலிருந்து காயத்ரீ, காயத்ரியிலிருந்து 3 வேதங்கள் உண்டா யின. வேதத்தின் ஸாரத்தைக் கண்டறிய தயிரைக் கடைவது போல் ப்ரும்மா வேதங்களைக் கடைந்தார். அதன் ஸாரம் காயத்ரீ, காயத்ரியின் ஸாரம் வ்யாஹ் ருதி. வ்யாஹ்ருதியின் ஸாரம் ப்ரணவம் எனக்கண் டார். ஆதலின் அவைகளையும் சேர்த்து ஜபித்தால் தான் காயத்ரீ பூர்ணமாகும். காயத்ரியின் பலனை யும் பெறலாம். 3 வேதங்களிலிருந்து 3 பாதமாக காயத்ரீ அமைந்துளதெனினும் நாம் ஜபிக்கும் வண்ணம் மூன்று பாதத்துடன் சில விடத்திலும் தனித் தனி பாதமாகவும் வேதத்தில் காயத்ரீ காணப்படுகிறது.

ப்ரணவம், பரமாத்ம ஸ்வரூபம், ப்ரும்மத்தா லுண்டுபண்ணப்பட்ட 3 லோக ரூபமான 3 வ்யாஹ் ருதிகளிலும் நிறைந்திருக்கிறார் பரமாத்மா என்று பொருள் கூறப்படுகிறது. இதில் அதிகமாக எவரும் வாதம் செய்யவில்லை. காயத்ரியில்தான் பொருள் பேதம் கூறப்படுகிறது. எல்லோரும் ஸகுணமான பொருளைக் கூறினாலும் அந்த ஸகுணமான வஸ்துவே முடிவில் பரமாத்மா என்ற முடிவிற்கே வருகின்றனர். இதன் அர்த்தம் (1) பரமாத்மா (2) ஸூர்யன் (3) காயத்ரீ தேவி (4)

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

சிவன் (5) விஷ்ணு (6) பராசக்தி என இவைகள் தான் ப்ரதாநமாகக் கூறப்படும் பொருள்கள். காயத்ரியில் 3 பாதங்களிலும் உள்ள 10 பதங்களில் தேவயஸ்ய, ஸவிது:, பர்க்க: என்ற மூன்று பதங்களுக்குத்தான் வெவ்வேறு பொருள் கூறப்படுகின்றன. பொதுவாகக் கூறப்படும் அர்த்தம்:— ய:=எவர், ந:=நம்முடைய, திய:=புத்தியை, ப்ரசோதயாத்=தூண்டுகிறாரோ [இதுவரை விவாதமில்லை] தத்=அப்படிப்பட்ட, தேவஸ்ய=ப்ரகாசனை, ஸவிது:=உலகை உண்டுபண்ணுபவருடைய (ஸூர்யனுடைய) வரேண்யம்=மிக உயர்ந்ததான பர்க்க:=தேஜஸ்ஸை, தீமஹி=த்யானம் செய்கிறோம். உலகை உண்டுபண்ணுகிறவர் புத்தியைத் தூண்டுகிறவர் யாரோ அவரே காயத்ரியின் அர்த்தம். அவரது ஒளியோ உடலோ நமக்கு த்யாநம் செய்யத்தக்கது.

(1) பரமாத்மா என்பதற்கு ப்ரமாணம் தேடவேண்டாம். அவரே ஸ்ருஷ்டி கர்த்தா என வேதம், உபநிஷத், ப்ரும்மஸூத்ரம் முதலியவை கோஷிக்கின்றன. ஆதித்யனையும் படைத்து ஆதித்யனுக்குள்ளு மிருக்கிறார் என்ற உபநிஷத்தின்படி பரமாத்மா காயத்ரியின் அர்த்தம். அவரே நமது புத்தியைத் தூண்டுகிறவர் எனப்படுகிறது. (2) ஆதித்யன் என்பவரே நம் கண்ணுக்குப் புலப்படும் ப்ரத்யக்ஷ தெய்வம். அவரே உதயமாகும் போது எல்லோர் ப்ராணனையும் கொண்டு வருகிறார். அஸ்தமிக்கும் போது கொண்டு போகிறார். அவர் கிரணத்தின் வழியாக எல்லோருக்கும் ஜீவிக்கும் சக்தி உண்டாகின்றது. புத்தியைத் தூண்டி அவரவர் வேலையைச் செய்யும்படி காலையில் உதயமாகின்றவர் ஸூர்யன். ஆதலால் அவரே காயத்ரியின்

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

பொருள் என்று கூறினும் தவறில்லை. ஆனால் இவரையும் படைத்தவர் பரமாத்மா. இவர் ஒரு ஜீவாத்மா தானே. ஆதலால் நேராக பரமாத்மாவே காயத்ரியின் பொருள் என்பவர் இதை ஆக்ஷேபிப்பர். (3) தேவர்களைவிட 3 தேவிகளே கருணையுள்ள மூர்த்திகள். ஆதலால் தேவதை என்று பெண் வடிவமாக ஸகல தேவர்களும் கூறப்படுகிறார்கள். அதி தேவதை ப்ரத்யதி தேவதைகளுடன் கூடிய ஆதித்ய க்ரஹத்துக்கு நமஸ்காரம் என்று, நவக்ரஹ நமஸ்காரத்தில் காணலாம். ஆதலின் காயத்ரீ என்பவளை மும் மூர்த்தி ஸ்வரூபிணியாகக் கூறி "முக்தா வித்ரும"; என்ற த்யான ச்லோகத்தால் காயத்ரியைப் பெண் வடிவமான தேவியாகக் கூறுகிறோம். ஸாவித்ரீ காயத்ரீ, ஸரஸ்வதீ, ஸந்த்யை, என்பவள் அவளே. காலையில் சிறியவளாகவும் பகலில் யுவதியாகவும் மாலையில் வ்ருத்தையாகவும் நினைக்க வேண்டும் என்று கூறப்படுவதாலும் அவளுக்கே உலகைப் படைக்கும் சக்தி இருப்பதாலும் அவளே காயத்ரியின் அர்த்தம் என்பர். இங்ஙனமே மும்மூர்த்திகளையும் பராசக்தியையும் தம் தம் இஷ்டதேவதைகளையும் காயத்ரியின் அர்த்தம் என்பர். ஹரதத்தாசார்யரும் அப்பய்ய தீக்ஷிதர்வாளும் "ப³ர்க்க" எனில் சிவன் என்பது மிக ப்ரஸித்தமானதாலும் சிவனே ஜகத் ஸ்ருஷ்டி முதலியவைகளுக்குக் கர்த்தா ஆனதாலும் காயத்ரியின் பொருள் சிவனே என்றனர். "புஜங்கபூஷணோ, பர்க்கோ, கிரிதன்வா கிரீப்ரிய:" என்பது சிவநாம அஷ்டோத்தர ஶத ஶ்லோகம்.

ஜன்மாந்தரத்தில் செய்த பாபம் அகலவும் நற்புத்ரன் உண்டாகவும் காயத்ரியால் திலஹோமம்

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

செய்யவேண்டும், என ப்ராயச்சித்த ப்ரகரணத்தில் மஹரிஷிகள் கூறினர். அந்த ஹோமம் செய்தவுடன் "ஹோமம் செய்த பொருள் அந்த தேவதையைச் சார்ந்தது. என்னுடையதல்ல" என்று கூறப்படுகிறது பழக்கம். அதற்கு உத்தேச த்யாகம் என்று பெயர். அக்னயே ஸ்வாஹா என்று ஹோமம் செய்தவுடன் "அக்னய இதம் நமம" என்பது உத்தேச த்யாகமாகும். காயத்ரியால் ஹோமம் செய்த பின், ஸூர்யாய இதம் நமம என்று கூறுவதால் காயத்ரியின் அர்த்தம் ஸூர்யனே என்பது கர்ம மார்க்கத்தைத் தழுவினவர்களது கொள்கை. இப்படிப் பல அர்த்தங்கள் கூறினல் உபாஸகர் எதை நம்புவது? எதைச் செய்வது? எனத் தோன்றும், உண்மை! ஒரு சிஷ்யன் ப்ரும்மஸ்வரூபத்தைக் கூறவேண்டும் என்று குருவை அடுத்தான். அவர் எதிலிருந்து உலகம் தோன்றி நின்று எதில் ஒடுங்குகிறதோ அதே ப்ரும்மம் என்ருர். சிஷ்யன் யோசனை செய்து முதலில் ப்ரும்மத்திற்குக் கவசம் போலிருக்கும் அன்னமய கோசத்தைப் ப்ரும்மம் என எண்ணினுன். பிறகு அவனே யோசித்து ப்ராணமய, மனோமய, விக்ஞாநமய, ஆநந்தமய கோசங்களைப் ப்ரும்மம் என எண்ணினுன். இவைகளுக்கும் மேலாக உள்ளவர் பரமாத்மா என குரு கூறினர். இது போல் ஆரம்பத்திலேயே ப்ரும்மம் காயத்ரியின் அர்த்தம் என்று கூறினல் சிறுவன் மூளையில் ஏருது. அதற்காக ஸூர்யன், காயத்ரீ முதலியவைகளைக் கூறினல் அவன் காயத்ரீ செய்யச் செய்ய அவன் உள்ளம் சுத்தமாகி ப்ரும்மத்தை நாடும். அதைக் காண்பிக்கவே காயத்ரீ உபதேசத்தை ப்ரும்மோபதேசம் என அழைப்பது. ஆதலால்

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

காயத்ரியின் அர்த்தம் மேல் சொன்னவைகளில் ஏதேனும் ஒன்றை த்யானம் செய்துகொண்டே ஜபம் செய்தால் அது பரமாத்மாவை த்யானம் செய்வது போலாகும். எந்த மூர்த்தியை (உடலை) உபாஸித்தாலும் அவரவர்க்கும் அதே ச்ரத்தையை அளித்து அந்த உபாஸனையை நானே ஏற்கிறேன் என்கின்றார் கீதாசார்யன்.

## காயத்ரீ ஜபம் செய்வதெப்படி?

முன் சொன்னபடி பூர்வாங்கமாக சுத்தனாய் ஸந்த்யை செய்து குறித்த சுத்தமான இடத்தில் ஆஸனத்திலமர்ந்து ஸங்கல்பம், ப்ராணாயாமம் செய்து "ஆயாது" என்ற மந்த்ரங் கூறி பிறகு காயத்ரீ ஜபம் செய்ய ஆரம்பிக்க வேண்டும். இது வரை உட்கார்ந்து கொண்டே செய்யவேண்டும். காலையில் நின்றுகொண்டே காயத்ரீ ஜபம் செய்ய வேண்டும். மாத்யான்ஹிக ஜபத்தில் மஹர்ஷிகள் இரு வகையாகக் கூறுவதால், அவரவர் வழக்கப் படி நின்று கொண்டோ உட்கார்ந்தோ ஜபம் செய்யலாம். ஆனல் பெரும்பாலான ரிஷிகள் மாத்யான்ஹிகத்தில் நின்று கொண்டேதான் செய்யவேண்டும் எனவற்புறுத்துகின்றனர். ஸாயங் கால ஜபம் உட்கார்ந்து கொண்டேதான் செய்ய வேண்டும்.

காலையிலும் மாத்யான்ஹிகத்திலும் கிழக்கு முகமாக ஜபம் செய்யவேண்டும். ஸாயம் காயத்ரியை மேற்கு முகமாகவே ஜபம் செய்யவேண்டும். மாத்யான்ஹிகத்தில் வடக்கு முகமாகவும் செய்ய லாம் என்பர் சிலர். ஒரு போதும் வடக்கு முகமாக காயத்ரீ செய்யக்கூடாதென்பர் சிலர். ஆதலால்



CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

வாதமில்லாத கிழக்கு முகமாகச் செய்யலாம். ஜபம், அர்க்யம், பின் செய்யும் த்யானம் இவைகளை மாத்ரம் மாலையில் மேற்கு முகமாகத் தான் செய்ய வேண்டும். ஆசமனம் முதல் எல்லாவற்றையுமே, மேற்கு முகமாக (தற்காலத்தில்) சிலர் செய்கின்றனர். இது தவறு. எப்போதும் ஆசமனம் மார்ஜனம் முதலியவைகளைக் கிழக்கு அல்லது வடக்கு முகமாகத் தான் செய்யவேண்டும். தெற்கிலோ மேற்கிலோ செய்யக் கூடாது.

ஒவ்வொரு தினமும் ஒவ்வொரு வேளையிலும் 1000 ஜபம் செய்வது உயர்ந்தது. முடியாதவர் தினமும் 100 செய்வதும் மத்யமம். மிக அவஸரம், யாத்திரை மார்க்கம், ஆசௌசம் இத்தகைய காலத்திற்காகக் கூறப்பட்ட 10 ஜபத்தையாவது செய்ய வேண்டும். அது அதமம். ஸௌகர்யமுள்ளபோது 10 செய்வதுகூடாது. 1008, 108, என சில மஹர்ஷிகள் கூறுவதால் அப்படியும் செய்வது பெரியோர் ஆசாரம்.

காலையில் இரு கரங்களையும் அஞ்ஜலி போல் அமைத்து முகத்திற்கு நேராக வஸ்த்ரத் வால் மூடிக்கொண்டு ஜபம் செய்யவேண்டும். பகலில் மார்புக்கு நேராகவும், மாலையில் நாபிக்கு நேராகவும் வைத்துக்கொண்டு ஜபிக்கவேண்டும். அஞ்ஜலி எனில் நமஸ்காரம் போல் இரு உள்ளங் கைகளையும் சேர்த்து விடுவது. அப்படியானல் எண்ணமுடியாது. ஆதலால் அர்க்யம் கொடுக்க இரு உள்ளங்கைகளையும் வைத்துக் கொள்வது போல், உள்ளங்கை மார்புக்கு எதிராக இருக்கும் படி வைத்துக் கொள்ளவேண்டும். அப்போது தான் எண்ண முடியும்.

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

அவஸரமானலும் கூட தீட்டில் செய்வதுபோல் 10 ஜபம் செய்யக்கூடாது. 54 ஆவது செய்ய வேண்டும. 32, 28, என்று சில கணக்குகளைப் பெரியோர் கூறி அநுஷ்டிப்பர். அதமமான 10 ஜபம் கூடாது. மத்யமமான 100 அல்லது 108 செய்யவேண்டும் என்பதே இதன் கருத்து.

ஆயிரமா ஆயிரத்தெட்டா நூரு நூற்றெட்டா? என, ஸம்சயம் தோன்றும். ஆயிரமென்றே, நூறென்றே பல முனிவர் கூறினர். ஆனல் சில ரிஷிகள் எட்டு கூடச் சேர்த்துச் சொன்னதால் அப்படியும் அநுஷ்டானமுண்டு. ஜப மாலை 1008 மணிகளால் அல்லது 54, அல்லது 28 மணிகளால் செய்துகொண்டு அதனல் ஜபம் செய் என்றதால் 108-54-28 என்ற காயத்ரீ ஜபக் கணக்கும் உண்டானதென ஊஹிக்க வேண்டியிருக்கிறது. (லலிதா ஸஹஸ்ர நாமம் 1000 நாமாவே.) 8 கூடச் செய்தால் இதில் ஏதேனும் குறைவு இருந்தால் அது அகலும். ப்ரும்மசாரி ஸந்த்யை ஜபம் ஸமிதாதானம் செய்து வேதங்கற்கவேண்டும். ஸந்த்யை ஜபம் ஆனபின் க்ருஹஸ்தர் அக்நிஹோத்ரம் அல்லது ஔபாஸநம் செய்து மேலே ப்ரும்மயக்ஞம் முதல் பல கர்மாக்களை அநுஷ்டிக்க வேண்டும். க்ருஹஸ்த தர்மத்தை நடத்தப் பொருள் தேடல் முதலிய லௌகிக கர்மாவும் இருப்பதால் ப்ரதி தினம் இவர்கள் 100 அல்லது 108 ஜபம் செய்தால் போதும். வான ப்ரஸ்தனும் ஸந்யாஸியும் 1000 அல்லது 1008 ஜபம் செய்ய வேண்டும் என்றனர். தற்சமயம் அக்னி ஹோத்ராதிகளை நடத்தாதவர் 1008 செய்யவேண்டும். 108-ஆவது செய்வது தான் முறை.

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

## எண்ணுதல்

எண்ணுமல் ஜபம்செய்தால் பயனில்லை. விரலை மடக்கியோ நீட்டியோ எண்ணினாலும், பூணூலில் எண்ணிக்கை வைத்துக்கொண்டாலும் பயனில்லை. அ முதல் க்ஷ வரை உள்ள ஸம்ஸ்க்ருத எழுத்துக்கள் 50. ஒரு முறை ஜபம் ஆனவுடன் அ என எண்ணுவது, அடுத்த ஜபத்தில் ஆ என எண்ணுவது. இங்ஙனம் க்ஷ வரை 50. பிறகு க்ஷ விலிருந்து தலை கீழாக எண்ணி அ என்ற எழுத்தில் முடித்தால் 100 ஆகின்றது. இதே எண்ணிக்கைக்கு உயர்ந்த வழி. இதே அக்ஷரமாலை எனப்படும். ஞாபக சக்தி இல்லாததால் அக்ஷரமாலையாக வைத்துக் கொள்ளச் சொன்னார்கள். அந்த ஜப மாலையைப் பஞ்சகவ்யத்தால் நனைத்து அதில் உள்ள ஒரு மணிக்கு ஒருமுறை மந்த்ரஜபம் செய்து (108 ஜபமாலையானால் 108 ஜபம்.) ஒரு மந்த்ரத்திற்காக ஏற்பட்ட மாலையைக் கொண்டு மற்றொரு மந்த்ரம் ஜபிக்காமல், ஜப மாலையைப் பூமியில் வைக்காமல், அதைத் தலை கீழாகச் சுற்றுமல் குறிப்பிட்ட விரல்களால் தள்ளி ஜபம் செய்ய வேண்டும், என்ற பல நியமங்கள் இருக்கின்றன. அன்றியும் காயத்ரீ வேத மூலமானதால் விரல் மூலத்திலுள்ள ரேகைகள் மூலம் எண்ணுவது சிறந்தது என ரிஷிகள் கூறுவதாலும் சிஷ்டர்கள் பெரும்பாலானவர் விரல் ரேகை மூலமாகவே எண்ணுகின்றனர்.

மோதிர விரல் நடு ரேகையில் கட்ட விரலால் 1 என்று எண்ண ஆரம்பித்து, கீழ் ரேகை 2, சுண்டி விரல் கீழிருந்து மேல் வரை 3, ஆக 5. மோதிர விரல் மேல் ரேகை 6, நடு விரல் மேல் ரேகை 7, ஆள்காட்டி விரல் மேலிருந்து கீழ் வரை 3, ஆக 10 ஆகின்றது. 10 என்று எண்ணிய விடத்திலேயே

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

11 என ஆரம்பித்து வந்த வழியே திரும்பி எண்ணி ஒன்று என்ற விடத்தில் 20 என்று முடித்து இங் ஙனம் 5 முறை செய்தால் 100 ஆகின்றது. இது ஒரு வழி. மற்றும் இரண்டு வழிகளும் அநுஷ்டா னத்தில் இருக்கின்றன. (2) மோதிர விரல் அடி ரேகையில் ஆரம்பித்து சுண்டி விரல் முதல் ப்ர தக்ஷிணமாக எண்ணி நடுவிரல் அடி ரேகையில் 10 என்று எண்ணுவது ஒரு முறை. (3) நடு விரல் நடு ரேகையில் ஆரம்பித்து ப்ரதக்ஷிணமாக (நடு விரல் கீழ் ரேகை 2. மோதிர விரல் கீழ் ரேகை 3. என) நடு விரல் அடி ரேகையில் 12 என எண்ணி முடித்து இப்படி 9 முறை செய்தால் 108 ஜபமாகும். இதில் இஷ்டமானபடி செய்யலாம். ரேகையால் எண்ண வேண்டு மென்பதே முக்யம். அதிலும் முக்யமாகக் கவனிக்க வேண்டியது நடு விரலிலுள்ள கீழ் 2 ரேகைகளும் மேரு என்றும் அதைத் தாண்டினுல் ஜப பலன் ஸித்திக் காதென்றும் கூறுவதால் எண்ணிக்கைத் தவறு தலால் ஜப பலத்தை இழக்காதபடி கவனிக்க வேண்டும். 10 அல்லது 20 ஆன பின் இடது கை விரலில் கூறியபடி 'எண்ண வேண்டும். ஆள் காட்டி .விரலிலிருந்து மோதிர விரலுக்கு கட்டை விரலைக்கொண்டுவந்தால் அது மேருவைத் தாண் டியதாகும்.

## ஜபமாலை

பொன், வெள்ளி, தாம்ரம், ரத்னம், சங்கம், ருத்ராக்ஷம், முத்து, பவழம், ஸ்படிகம், தாமரை மணி, தர்ப்பை முடி முதலியவைகளால் ஜபமாலை செய்து அதற்குக் கூறப்பட்ட விதிப்படி, ஒவ்வொரு மணியின் அடிப்பக்கம், மற்றொன்றின் அடிப்பக்க

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

மாகவும் தலைப்பும் தலைப்புறமாகவும் சேர்த்துக் கோர்க்க வேண்டும். 108 மாலையானால் மேரு என்று நடுவில் சிறிது பெரியதாக ஒன்றைக் கோர்க்க வேண்டும். 54, 28 இவைகளுக்கும் அப்படியே. ஸத்யோஜாதாதி மந்த்ரங்களால் பஞ்சகவ்ய அபிஷேகம் சந்தனப் பூச்சு முதலியவைகளைச் செய்து ஈசான மந்த்ரத்தைப் பொதுவாக 108 முறை, மேருவுக்காக 10 முறை ஜபம் செய்து வைத்துக்கொள்ள வேண்டும். ஜபம் செய்யும்போது மாலை அசங்கக் கூடாது. ஆள்காட்டி விரல் மேலே படக் கூடாது. பூமியில் விழும்படி விடக்கூடாது. பூமியில் வைக்கக் கூடாது. இது முதலிய ச்ரமங்கள் இருக்கின்றன. கையால் எண்ணுவதைவிட இவைகளால் எண்ணினால் 100 ஆயிர மடங்கு பலன் அதிகம் என்று கூறினாலும் விரலால் ரேகையை எண்ணுவதில் அதிக ச்ரமமில்லை என பெரியோர் பெரும்பாலும் மாலைகளை உபயோகிப்பதில்லை. பல ரிஷிகளும் ரேகையையே வற்புறுத்துகின்றனர்.

## ஜப காலத்தில் விலக்கத்தக்கவை

மேல் வஸ்த்ரத்தைப் பூணூல்போல் அமைத்துக்கொண்டு அதனால் இரண்டு கைகளையும் மூடிக் கொண்டு ஜபிக்க வேண்டும். தலையையும் உடலையும் மூடிக் கொண்டு ஜபிக்கக் கூடாது. பேசிக் கொண்டும், அருகிலுள்ளவைகளைப் பார்த்துக் கொண்டும், சிரித்துக் கொண்டும், தூண் முதலியவைகளில் சாய்ந்து கொண்டும், காலின் மேல் காலை போட்டுக் கொண்டும், கவனமில்லாமலும், வேறொன்றை நினைத்துக் கொண்டும், அடிக்கடி கோட்டுவாய், தும்பல், துப்புதல் முதலியவைகளைச் செய்து கொண்டும் ஜபம் செய்யக் கூடாது. அப்

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

படி செய்யும் ஜபம் பலனைத் தராது. தும்பல், கோட்டுவாய் நேர்ந்தால், உடனே மூக்கைத் தொட்டு வலது செவியை ஓம் என்று தொட்டு ச்ரோத்ர ஆசமனம் செய்து மேலே ஜபிக்க வேண் டும். அல்லது ஸூர்ய சந்த்ரர்களைப் பார்த்தால் போதும். நாய், பன்றி, கழுதை, நீசன், பதிதன் தூர ஸ்த்ரீ, கழுகு, குரங்கு இவைகளைப் பாராமல் ஜபம் செய்ய வேண்டும். அப்படி அவைகளைப் பார்க்க நேர்ந்தால் முன் சொன்னபடி செய்ய வேண்டும், நதீ, தடாக தீரத்தில் ஜப மண்டபம் அமைத்திருப்பது இவைகள் கண்ணில் படாமல் தடுக்கவே. கண்களை மூடிக் கொண்டாலும் அல்லது மூக்கு நுனியைப் பார்க்கும்படி கண் களைத் திறந்திருந்தாலும் இவை கண்ணில் படா. ஆனால் கண்களை அடியோடு மூடி விட்டால் சிலருக் குத் தூக்கம் வந்து விடும். தூக்கம், சோம்பல், கோபம் முதலியவை ஜபப் பயனைக் கொண்டு போய்விடும். ஜப நடுவில் எவருடனும் பேசக் கூடாது. அவச்யம் நேர்ந்தால் ஜபத்தை முடித்து விட்டுப் பேசவேண்டும். இல்லையேல் மறுபடி அடியி லிருந்து ஆரம்பித்து ஜபிக்க வேண்டும். ஜபம், ஹோமம், பூஜை, ஸ்நானம், பல்தேய்த்தல், ஸந்த்யா வந்தனம், வஸ்த்ரம் உடுத்தல், பெரியோர் முன் னிலை, கோவில், ஜல மல விஸர்ஜனம் முதலிய காலங்களில் பேசக் கூடாது. மிக அவச்யமாகப் பேச நேர்ந்தால் (ஜல மல விஸர்ஜனம், பல்தேய்த் தல் தவிர மற்ற போது) ச்ரோத்ர ஆசமனம் செய்து பகவன் நாமாவைக் கூறி மேலே கர்மா வைச் செய்ய வேண்டும்.

ஜல மலங்களை அடக்கிக் கொண்டு எந்த கர் மாவையும் செய்யக் கூடாது. ஜபம் செய்யும்

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

போது இடுப்புக்குக் கீழுள்ள இடங்களை தொடக் கூடாது. தொட நேர்ந்தால் கைகளை அலம்பி முன் போல் ஆசமனம் செய்ய வேண்டும். சொக்காய் அணிந்தோ, தலைப்பாகை அணிந்தோ, மேல் வஸ்த்ர மில்லாமலோ, பாதுகையுடனோ, க்ருஹஸ்தனுல் பஞ்ச கச்ச மில்லாமலோ, தலை மயிரைக் கட்டாமலோ, அல்லது பின்னுல் கழுத்தில் படும்படி சிகை நுனியில் முடி போட்டுத் தொங்க விட்டுக் கொண்டோ, படுத்துக் கொண்டோ, நடந்து கொண்டோ, பிறர் காதில் படும்படி உரக்க மந்த்ரத்தை ஜபித்துக் கொண்டோ, எதையேனும் தின்று கொண்டோ, வாயில் ஒன்றை அடக்கிக் கொண்டோ, நாற்காலியில் உட்காந்து காலைத் தொங்க விட்டுக் கொண்டோ, கால்களை ஆட்டிக் கொண்டோ, கழுத்தில் மாலைபோல் வஸ்த்ரத்தைத் தொங்க விட்டுக் கொண்டோ, பூணூலைக் கையால் பிடித்துக் கோண்டோ, பூணூலால் எண்ணிக் கோண்டோ, வண்டியில் போய்க் கொண்டோ ஜபிக்கக்கூடாது. அப்படி ஜபித்தால் ஜப பலன் உண்டாகாது.

உதடு அசங்கி பிறர் காதில் படும்படி உச்சரிப்பது அதமம். அப்படி ஜபிக்கக் கூடாது. உதடு மாத்ரம் அசங்கி த்வனி கேட்காமல் ஜபிப்பது மத்யமம். மனதினுலேயே ஜபிப்பது உத்தமம். மந்த்ரம் என்ருல் நினைப்பவனை ரக்ஷிப்பது என்றும் மனதைக் காப்பது என்றும் பொருள். மனதினுல் காயத்ரி ஸ்வரூபத்தை த்யானம் செய்து கொண்டு ஜபிக்கவேண்டும். ஸாத்யமானுல் கும்பக ப்ராணுயாமம் செய்து அதாவது ஶ்வாஸத்தை அடக்கி ஜபம் செய்யலாம். அப்படிச் செய்தால் விசேஷ பலனுண்டு. அப்படித்தான் செய்ய வேண்டுமென்று கட்டாயமில்லை.

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

அதிக ஶ்ரத்தையினல் நடக்கும்போதும், படுத்திருக்கும்போதும் மற்ற காலத்திலும் மனதினல் காயத்ரீ ஜபம் செய்வதாகச் சிலர் கூறுவர். அது முற்றிலும் சாஸ்த்ர விரோதம். மனதால் காயத்ரீ ஸ்வரூபத்தை த்யானம் செய்யலாம். கணக்கில்லாமலும், அகாலத்திலும், அசுத்தனுகவும், நடந்துகொண்டும் காயத்ரீ ஜபம் செய்யக்கூடாது எண்ணுவதால் த்யானம் தடைபடும். ஆதலால் எண்ணுமல் ஜபிக்கலா மென்பதும் தவறு.

## காயத்ரீ புரஶ்சரணமும் காம்ய பலனும்

எந்த மந்த்ரமும் ஸித்தியை அளிக்க வேண்டுமானல் முதலில் புரஶ்சரணம் என்ற கர்மாவைச் செய்யவேண்டும். முன்னே செய்ய வேண்டியது, எதிரில் தோன்றிய பலனை அளிப்பது என்பது அதன் பொருள். விச்வாமித்ரர் அப்படிப் புரஶ்சரணம் செய்து காயத்ரியைத் தர்சித்து அரிய ப்ராம்மண்யத்தைப் பெற்ருர். காயத்ரீ புரஶ்சரண வழியைப் பற்றி பல நூல்கள் உண்டு. தேவீ பாகவதம் 11-ம் ஸ்கந்தம் 21 அத்யாயங்களில் கூறிய சுருக்கமிது :

புண்ய க்ஷேத்ரத்தில் புரஶ்சரணம் செய்ய் வேண்டும். வேறு எந்த மந்த்ர புரஶ்சரணம் செய்வவதானுலும் 10 ஆயிரம் காயத்ரீ ஜபம் செய்த பின்பே அதை ஆரம்பிக்கவேண்டும். காயத்ரீ புரஶ்சரணம் செய்ய முதலில் க்ருச்ரம் (சாந்த்ராயணம் முதலியன) செய்து சரீர தோஷத்தை அகற்றி அநுக்ஞை, ஸங்கல்பம், நவக்ரஹ ப்ரீதி, நாந்தி ச்ராத்தம் முதலியவைகளைச் செய்து ஜபத்தை ஆரம்பிக்க வேண்டும். ஒரு தினத்திற்கு இவ்வளவு ஜபம் என நிச்சயித்து ஸங்கல்பத்தில்

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

கூறி, தவருமல் அப்படியே ஜபிக்கவேண்டும். ஒரு அக்ஷரத்திற்கு லக்ஷமாக 24 லக்ஷம் காயத்ரீ ஜபம் செய்து அதில் 10-ல் ஒரு பங்கு ஹோமம் செய்ய வேண்டும். அதாவது 24 ஆயிரம் ஹோமம் செய்ய வேண்டும். நெய், பால், அன்னம், எள்ளு, தூர்வை, தாமரைப்பூ, யவம், தேன் இந்த 8 வஸ்துக்களைக் கொண்டு தனித்தனி ஒவ்வொன்றினுலும் மூன்று மூன்று ஆயிரமாக (3×8=24) ஹோமம் செய்ய வேண்டும். இதன் பின்புதான் நமது இஷ்டமான பலனைப் பெற அதற்குக் கூறியபடி ஹோமம் அல்லது ஜபத்தைச் செய்யவேண்டும்.

## காம்ய பலனும், காயத்ரீ ஜபமும் ஹோமமும்

(1) ப்ரதி தினம் காலை 1000 காயத்ரீ ஜபம் ஒரு வருஷம் செய்தால் தீர்க்க ஆயுஸ், ஆரோக்யம், தேஹ பலம், தனம் உண்டாகும்.

(2) 25 லக்ஷம் தயிர் அல்லது பாலால் ஹோமம் செய்தால் தன் உடல் காயத்ரீ மயமாகி ஸித்தி உண்டாகும். அஷ்டாங்க யோக ஸித்தியும் உண்டாகும்.

(3) லக்ஷம் தாமரை புஷ்பங்களால் ஹோமம் செய்வது மோக்ஷத்தைத் தரும்.

(4) நோயகலும் வரை நித்யம் சங்க புஷ்பத்தால் 1008 காயத்ரீ ஹோமம் செய்தால் குஷ்ட நோயகலும்.

(5) முன்போல நாயுருவி, அரச ஸமித்தால் ஹோமம் செய்தால் அபஸ்மாரம் (காக்காவலி) போகும்.

(6) முன்போல் அத்தி ஸமித்தால் ஹோமம் செய்தால் பைத்தியமும், மேக ரோகமு மகலும்.

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

(7) முன்போல் தேன், கரும்புசாறு இவைகளால் ஹோமம் செய்தால் ப்ரமேஹ மகலும்.

(8) முன்போல் சர்க்கரை, தேன், வாழைப் பழம் இவைகளால் ஹோமம் செய்தால் மஸூரிகா எனும் நோயகலும்.

(9) ஒரு மாதம் தினமும் அத்தி, ஆலை, அரசு ஸமித்து முதலியவைகளால் 1008 ஹோமம் செய்தால் பசு, யானை, குதிரைகளின் ரோகமலும்.

(10) முன்போல் சமீ அன்னம் ஆஜ்யமிவை களால் 108 ஹோமம் செய்தால் வீட்டில் பாம்பு புற்று, எறும்பு புற்று முதலியவைகள் தோன்ருது.

(11) 7 நாள் காட்டு நொச்சியால் 1008 முறை ஹோமம் செய்தால் இடி, பூகம்பம் முதலியன தோன்ருது.

(12) 100 முறை காயத்ரீ ஜபம் செய்து மண் கட்டியை அதற்கு எதிராக எறிந்தால் புயல் காற்று, தீ இவை நிற்கும். சத்ருக்களும் நம்மை எதிர்த்து வரமாட்டார்கள்.

(13) தினம் 100 முறை மனதால் ஜபம் செய் தால் பந்தத்திலிருந்து விடுபடுவர்.

(14) 100 முறை ஜலத்தில் ஜபம் செய்து சாப் பிட்டால் விஷமகலும். பூத, பிசாச சேஷ்டை ஒழியும்.

(15) 100 முறை ஜபித்து விபூதி அணிந்தால் ஜ்வரம் நீங்கும்.

(16) நித்யம் 100 தாமரைகளால், பலாச ஸமித் அல்லது அரசஸமித்தால் காயத்ரீ ஹோமம் செய்தால் லக்ஷ்மீ கடாக்ஷம் உண்டாகும்.

(17) முன்போல் பொரியாலும், த்ரி மதுரங் களாலும் ஹோமம் செய்தால் நல்ல வரன் அல்லது கன்யகை கிடைக்கும்.

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

(18) 7 நாள் தினம் 100 முறை சிவந்த தாமரையால் ஹோமம் செய்தால் வீட்டில் ஸ்வர்ணம் வ்ருத்தியாகும்.

(19) பலன் உண்டாகும் வரை பாயஸான்னத்தை ஸூர்யனுக்கு நிவேதநம் செய்து பாயஸான்னத்தால் நித்யம் 100 ஹோமம் செய்தால் ஸத்புத்ரன் உண்டாவான்.

(20) 7 நாள் 1000 தூர்வா, பால், தேன்களால் ஹோமம் செய்தால் அபம்ருத்யு அகலும்.

(21) 3 நாள் ஒரு வேளை உபவாஸமிருந்து நித்யம் 1000 தூர்வா பால் தேன்களால் ஹோமம் செய்தால் அபம்ருத்யு அகலும்.

(22) 7 நாள் உண்ணுமல் நித்யம் 1000 எருக்கை ஸமித்தால் ஹோமம் செய்தால் எடுத்த வேலை ஜயமாகும்.

(23) 7 நாள் நியமத்துடன் பாயஸம், புஷ்பம், நொச்சில், ஸமித் இவைகளால் 1008 ஹோமம் செய்தால் மழை உண்டாகும்.

(24) 7 நாள் உபவாஸத்துடன் நாபி வரை ஜலத்தில் நின்று தினம் 1000 ஜபம் செய்தால் மழை பொழியும்.

(25) 7 நாள் நித்யம் 1000 முறை ப்ராம்மீ ரஸம் என்பதை ஜபித்துக் குடித்தால் மூளை கலக்கம் அகலும். நல்ல புத்தி உண்டாகும். பைத்திய மகலும்.

(26) 3 மாதம் கும்பக ப்ராணுயாமத்துடன் 1000 காயத்ரீ ஜபம் செய்தால் எல்லா இச்சையும் பூர்த்தியாகும்.

(27) ஒரு காலால் நின்றுகொண்டு மேலே கைகளைத் தூக்கிக்கொண்டு நித்யம் 3 ஆயிரம் ஜபித்தால் 1 வருஷத்தில் ஸகல விருப்பமும் பூர்த்தி

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

யாகும். சென்றது, நடப்பது, நடக்கப்போகின்றதான 3 கால விஷயங்களையும் அறியலாம்.

(28) 4 வருஷம், அப்படி ஜபித்தால் இந்த்ராதி தேவர்களை நேரில் தர்சிக்கலாம்.

(29) 5 வருஷம் அப்படி ஜபித்தால் அணிமாதி அஷ்ட ஸித்திகளுண்டாகும்.

(30) 6 வருஷம் ஜபித்தால் இஷ்டமான ரூபத்தை எடுக்கலாம்.

(31) 7 வருஷம் ஜபித்தால் தேவராக ஆகலாம்.

(32) 12 வருஷம் ஜபித்தால் ப்ரும்மா வாகலாம்.

(33) நித்யம் காலையில் 1000 காயத்ரீ ஜபம் செய்தால் 1 மாஸத்தில் நாம் செய்த ஸகல பாபங்களுமகலும்.

## காயத்ரீ மஹிமையும், ஐஹிக பயனும்

மநு—பூ :, புவ :; ஸுவ :; மூன்று பாத முள்ள காயத்ரீ இவைகளை ரிக், யஜுஸ், ஸாம என்ற 3 வேதங்களிலிருந்து பொறுக்கி, காயத்ரியாக அமைத்தார் பகவான். அதை ஜபித்தால் 3 வேத அத்யயனம் செய்த பலனைப் பெறலாம்.

(2) ஸந்த்யை முதலிய நித்ய கர்மாக்களை விட்ட பாபம் ஆயிரம் முறை காயத்ரீ ஜபம் செய்தால் அகலும்.

(3) மோக்ஷ ஸாதனமாகிய ஸமாதியை விட காயத்ரீ ஜபம் சிறந்தது. இதில் பரப்ரும்மத்தின் பெயரான ஓங்காரமிருப்பதால் இதே க்ஞானம். ஸமாதி. இதைவிடச் சிறந்த ஸாதனம் வேறொன்றுமில்லை.

யமர் : ப்ரும்மா, ஸம்ஹிதை, பதம், க்ரமம், ஜடை, கனம், முதலியவைகளுடன் 4 வேதங்களை

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

ஒரு தட்டிலும் காயத்ரியை மற்ருெரு தட்டிலும் வைத்துத் தராசால் நிறுத்தார். இரண்டும் ஏற்றத் தாழ்வின்றி ஸமமாகவே இருந்தன. காயத்ரி 4 வேதங்களுக்கும் ஸமமானது.

சங்கரர் : ஸ்நாநத்திற்குரிய மந்த்ரங்களில் அகமர்ஷணம், ஹோம மந்த்ரத்தில் வ்யாஹ்ருதி, மந்த்ர ஜபத்தில் காயத்ரீ மந்த்ரம் இவைகளே மிகச் சிறந்தவைகள்.

ப்ருஹ்மா : காயத்ரியை விட சிறந்த ஜப மந்த்ரமில்லை. அதைவிட உயர்ந்த தபஸ் இல்லை. அதைவிட சிறந்த த்யானம் செய்யத்தக்க வஸ்து இல்லை. அதை விடச் சிறந்த ஹோம மந்த்ர மில்லை.

வ்யாஸர் : 10 முறை காயத்ரியை ஜபித்தால் 3 நாளில் செய்த பாபமகலும். 100 முறை ஜபித் தால் ஸர்வ பாபங்களுமகலும். ஆயிரம்முறை ஜபித் தால் உப பாதங்கள் அகலும். கோடி முறை ஜபித் தால் விரும்பிய ஸகலமும் கிட்டும். ராஜனுகலாம். தேவனுமாகலாம்.

ஸம்வர்த்தர் : பாபங்களை அகற்ற காயத்ரியை விடச் சிறந்த மந்த்ரமில்லை. ஆஹார நியமத்துடனும் ஆசாரத்துடனும் ஜபித்தால் தான் அது பலனைத் தரும். லக்ஷம் முறை ஜபித்தால் ஸகல பாபங் களும் அகலும். தகாத அன்னத்தைப் புஜித்தவன் 1000 காயத்ரீ ஜபித்தால்தான் சுத்தனுவான்.

விச்வாமித்ரர் : காயத்ரீ ஜபம் செய்பவனுக்கு எங்கும் பயமில்லை. நான்கு வேதங்களிலும் இதற்கு ஸமமான மந்த்ரமில்லை. வேதம், யாகம், தானம், தபஸ் ஆகியவை காயத்ரியின் ஒரு கலைக்குக் கூட ஸமமாகாது. எதை விட்டாலும் காயத்ரியை விடாதே.

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

யோக யாக்ஞவல்க்யர் : முதல்நாள் உபவாஸமிருந்து காலையில் 1000 காயத்ரீ ஜபம் செய்தால் ப்ரும்மஹத்தி தவிர மற்றெல்லா பாபங்களும் அகலும். நித்யம் காயத்ரீ ஜபம் ஒழுங்காகச் செய்தால் எந்த பாபதானம் வாங்கினாலும் தோஷம் கிட்டே அண்டாது. 100 ஜபம் செய்த பின் ஸ்நானம் செய்வது, ஜலத்தில் மூழ்கி 100 ஜபம் செய்வது, 100 ஜபம் செய்து ஜலத்தைக் குடிப்பது இவைகளால் உடனே ஸகல பாபங்களு மகலும்.

மார்கண்டேயர் : ஒருவனால் எவ்வளவு பாபம் செய்யமுடியுமோ அவ்வளவு பாபங்களைச் செய்திருந்தாலும் 10 ஆயிரம் காயத்ரீ ஜபம் செய்து விட்டால் அவைகள் பறந்தோடும். தீர்க்க ஆயுளைத் தரும்.

சதுர்விம்சதி மதம் : கோடி ஜபம் ப்ரும்மஹத்தி பாபத்தையும், 80 லக்ஷ ஜபம் ஸுராபான பாபத்தையும், 70 லக்ஷ ஜபம் ஸ்வர்ணம் திருடிய பாபத்தையும், 60 லக்ஷ ஜபம் குரு பத்நீ கமந பாபத்தையும், 80 ஆயிரம் ஜபம் காலையில் செய்தால் மற்ற ஸகல பாபங்களையும் அகற்றும்.

யாக்ஞ வல்க்யர் : காயத்ரீ தில ஹோமம் செய்தால் ஸகல பாபங்களும் நீங்கும்.

யோக யாக்ஞ வல்க்யர் : சுத்தனாய் ஊக்கத்துடன் நெய்யுடன் கலந்து காயத்ரீ தில ஹோமம் செய்தால் ஸகல பாபங்களுமகலும்.

வஸிஷ்டர் : எந்த பாபம் செய்திருந்தாலும் அது அகல காயத்ரீ தில ஹோமம் அல்லது ஜபம் செய்தால் அவை அகலும் என்பது நிச்சயம்.

ஸ்ம்ருதி ரத்னம் : தநத்தை வாங்கிக் கொண்டு பிறருக்குக் காயத்ரீ ஜபத்தை அளித்தால் அப்போதே அவன் சண்டாளன் ஆவான்.

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

காயத்ரீ ஜபம் :—ஆவணி அவிட்டம் ஆனவுடன் இப்படி ஒரு நாள் ஆயிரம் ஜபம் செய்யும்படி விதிக்கப்பட்டுள்ளது. ஓராண்டில் தெரிந்தோ தெரியாமலோ நாம் செய்த மஹா பாபங்கள் அகலவும் தோஷங்களால் பதிதனுகாமலிருக்கவும், இது ப்ராயச்சித்த கர்மாவாக விதிக்கப்பட்டது. ப்ராம்மணார்த்தம் சாப்பிட்டால் 108 காயத்ரீ, மாஸ்யம், ஆப்திகம், ஸபிண்டீகரணம் முதலியவைகளில் சாப்பிட்டால் 1008 காயத்ரீ ஜபம் ப்ராயச்சித்தமாக விதிக்கப்பட்டுளது. அத்தகைய காலங்களில் நித்ய ஸந்த்யாவந்தந காயத்ரியைக் காலத்தில் செய்து விட்டு சுமார் 8½ மணிக்கு மேல் ப்ராயச்சித்தமான காயத்ரி ஜபத்தை செய்யவேண்டும்.

பூணூல் யக்ஞோப வீதமாகவே இருக்கும் போது-தாவடமாகப் போட்டுக் கொள்ளாமல்—ஜலமல விஸர்ஜநம் செய்தால், அந்த அசுத்தமான பூணூலை விலக்கிச் சுத்தமாக புது பூணூல் அணிந்து 108 காயத்ரீ ஜபம் செய்யவேண்டும். இதுபோல் மற்ற கர்மாக்களிலும் குற்றம் நேர்ந்தால் காயத்ரீ ஜபம் விதிக்கப்பட்டுள்ளது. அதனுல் காயத்ரீ எத்தகைய உத்தம மந்த்ரம் என சொல்லாமலே விளங்கும். 3 நாள் ஸந்த்யை ஜபம் செய்யாவிடில் ப்ராம்மண்யத்தை இழந்து நாயாகப் பிறக்கிருன்.

தேவீ பாகவதம் 11-ம் ஸ்கந்தம் 1-வது அத்யாயம் முதல் 7-வது வரை காயத்ரீ விஷயம் கூறப்படுகிறது. ஒவ்வொரு அக்ஷரத்திற்கும் ரிஷி, சந்தஸ் தேவதை, தத்வம், முத்ரை, சக்தி, வர்ணம் முதலியவைகள் அங்கு கூறப்பட்டிருப்பதை இங்கு எழுதுகிறோம். முத்ரைகளைக் குரு முகமாகவே அறியவும் ந்யாஸம் : இரு கை விரல்களிலுமுள்ள 24 ரேகை

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

களிலும் 24 அக்ஷரங்களை முதலில் ந்யாஸமாக வைத்துப் பிறகு இங்கு கண்டபடி ந்யாஸம் செய்யவும். இவை அதிக பலனைத்தரும். காயத்ரீ கவசம், காயத்ரீ ஸஹஸ்ர நாமம் இவைகளும் தேவீபாகவதத்தில் கூறப்பட்டிருக்கின்றன. அவகாசமுள்ளவர் இவைகளைச் செய்து காயத்ரீ ஜபம் செய்ய வேண்டும். (அனுபந்தத்தில் காணவும்.)

## காயத்ரீ சாப விமோசனம்

காயத்ரீ ஜபத்திற்கு அடியிற் கண்டவர்களால் பூர்ணபலன் கிடைக்காமல் போகும்படி சாபம் ஏற்பட்டிருக்கிறது. ஆதலால் அந்த சாப விமோசன மந்த்ரங்களைக் கூறவேண்டும் என்பர்.

1. ப்ரும்ம சாப விமோசனம்.
2. விச்வாமித்ர ,,
3. வஸிஷ்ட ,,

காயத்ரீ கவசம், ஸஹஸ்ர நாம பாராயணம் செய்வதும் விசேஷமாகும். காயத்ரீ புரஸ்சரணை செய்பவருக்கு இவை மிக முக்யமானவைகள்.

அவதாரிகை முற்றிற்று

---

## குறிப்பு

ஸந்த்யா வந்தனத்தில் உள்ள ஒவ்வொரு மந்த்ரத்திற்கும் ரிஷி, சந்தஸ், தேவதை உண்டு. இவைகளைச் சொல்லி அனுஷ்டிப்பது விசேஷமானது. ஆனால், பலவித காரணங்களை முன்னிட்டு பெரும்பாலானவர் இவைகளைச் சொல்வதில்லை. ஒவ்வொருவரும் இவைகளை அறிந்து, அனுஷ்டித்து ஸந்த்யா வந்தனத்தின் பூர்ண பலனைப் பெறவேண்டும் என்ற நோக்கத்துடன் ரிஷி, சந்தஸ், தேவதைகளையும் சேர்த்துப் போட்டிருக்கிறோம்.



CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

# ஸந்த்யா வந்தனம்

கை கால்களை அலம்பி, ஶுத்தனாய், புண்ட்ரம் தரித்து, கிழக்கு அல்லது வடக்கு முகமாய் குத்திட்டு அமர்ந்து, இரு முழங்கால்களுக்கும் இடையில் கைகளை வைத்துக் கொண்டு ஆசமனம் செய்ய வேண்டும்.

**आचमनम्—अच्युताय नमः। अनन्ताय नमः। गोविन्दाय नमः॥ केशव। नारायण। माधव। गोविन्द। विष्णो। मधुसूदन। त्रिविक्रम वामन। श्रीधर। हृषीकेश। पद्मनाभ। दामोदर॥**

ஆசமனம்: அச்யுதாய நம: அனந்தாய நம: கோவிந்தாய நம:—என்று மும்முறை தீர்த்த மெடுத்து ப்ரும்ம தீர்த்தத்தால் அருந்தி, இரு முறை உதட்டை ஜலத்தால் துடைத்து, கேஶவ, நாராயண, மாதவ, கோவிந்த, விஷ்ணோ, மதுஸூதன, த்ரிவிக்ரம, வாமன, ஸ்ரீதர, ஹ்ருஷீகேஶ, பத்மநாப, தாமோதர—என்று 12 பகவன் நாமாக்களையும் குறிப்பிட்ட விரல்களால் அந்தந்த அவயவங்களைத் தொடவேண்டும்

குறிப்பு: எப்பொழுது ஆசமனம் செய்தாலும், மும் முறை அருந்தியவுடன், இரு முறை துடைத்து, பிறகு கேசவ முதலிய நாமாக்களால் தொடவேண்டும்

शुक्लांबरधरं विष्णुं शशिवर्णं चतुर्भुजं।
प्रसन्नवदनं ध्यायेत् सर्व विघ्नोपशान्तये।

ஶுக்லாம்பரதரம் விஷ்ணும் ஶஶிவர்ணம் சதுர்ப்புஜம்
ப்ரஸன்ன வதனம் த்யாயேத் ஸர்வ விக்னோப ஶாந்தயே

(வெண்மை வஸ்த்ரம் தரித்தவரும், எங்கும் வ்யாபித்து இருப்பவரும், சந்த்ரனைப் போன்ற நிற முடையவரும், நான்கு கைகளை உடையவரும், ப்ரஸன்னமான (மலர்ந்த) முகத்தை உடையவருமானவரை (வீநாயகரை)

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

